# பொருளடக்கம்






யூதேயாவின் தலைநகராகிய எருசலேமில் ரோம ஆளுநரான பிலாத்து தன் படையினரை ஒருநாள் விசாரணை செய்து கொண்டிருந்தான்












அப்படங்கள் அவர்களின் நகரத்தை பரிசுத்தக் குலைச்சலாக்குவதாகவும் நமது ரோம சாம்ராஜ்யத்தின் சின்னங்கள் அவர்களுக்கு அவமானமாக இருப்பதாகவும்

பேரரசரிடம் முறையிட்டு வழக்கில் வெற்றியும் அடைந்து விட்டனர்.

இவர்களை ஆளுவது கடினம். எருசலேமில் ஆளுநராய் இருக்கும் வேலை, ரோமப் பேரரசிலேயே கடினமான பணியாகும்.

அது சரிதான். நமது பேரரசிலேயே ரோமக் கடவுள்களை வணங்குவதிலிருந்து இம்மக்கள் மட்டும் விலக்குப் பெற்றுள்ளனர்.

தாங்கள் தெரிந்தெடுக்கப்பட்டவர்கள் என்பதுடன், ஓய்வுநாளில் வேலை செய்யாமலிருக்கவும், யூதரல்லாதோரை தங்கள் ஆலயத்தினுள் அனுமதியாமலும் இருக்கவும் இவர்கள் உரிமை பெற்றுள்ளனர்.

ஓ, இந்த எருசலேம் தேவாலயம்! இதில் நடக்கும் பண்டிகைக்கு 2 இலட்சம் பேராவது கூடுவார்கள், தீடீரென கலகம் ஏதும் செய்து விடுவார்கள்.

அவர்களுடைய நடவடிக்கைகளை நாங்கள் கண்காணிக்கிறோம். குழப்பம் வராதபடி தடுத்து விடுவோம்.

நல்லது தளபதி, யோர்தான் நதிக்கரையில் நடப்பவைகளைக் கவனித்து எனக்கு விபரம் அனுப்பிக் கொண்டிருங்கள்.

நானே அங்கு போகிறேன்.

இதைப்பற்றி யூதர்களுடைய அதிகாரிகளும் குழம்பியுள்ளனர். யோவான் ஸ்நானகனைப் பற்றி அவர்களே கவனித்துவருகின்றனர்.



















மத்தேயு 3:1-17

அந்நாட்களில் யோவான்ஸ்நானன் யூதேயாவின் வனாந்தரத்தில் வந்து, மனந்திரும்புங்கள், பரலோக ராஜ்யம் சமீபித்திருக்கிறது என்று பிரசங்கம் பண்ணினான். கர்த்தருக்கு வழியை ஆயத்தப்படுத்துங்கள்; அவருக்குப் பாதைகளைச் செவ்வைபண்ணுங்கள் என்று வனாந்தரத்திலே கூப்பிடுகிறவனுடைய சத்தம் உண்டென்று, ஏசாயா தீர்க்கதரிசியினால் சொல்லப்பட்டவன் இவனே. இந்த யோவான் ஒட்டகமயிர் உடையைத் தரித்து, தன் அரையில் வார்க்கச் சையைக் கட்டிகொண்டிருந்தான். வெட்டுக்கிளியும் காட்டுத் தேனும் அவனுக்கு ஆகாரமாயிருந்தது. அப்பொழுது எருசலேம் நகரத்தாரும் யூதேயா தேசத்தார் அனைவரும் யோர்தானுக்கு அடுத்த சுற்றுப்புறத்தார் யாவரும் அவனிடத்திற்குப் போய், தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு யோர்தான் நதியில் அவனால் ஞானஸ்நானம் பெற்றார்கள். பரிசேயரிலும் சதுசேயரிலும் அநேகர் தன்னிடத்தில் ஞானஸ்நானம் பெறும்படி வருகிறதை அவன் கண்டு, விரியன் பாம்புக் குட்டிகளே! வருங்கோபத்துக்குத் தப்பித்துக்கொள்ள உங்களுக்கு





நான்நீரில் ஞானஸ்நானம் தருகிறேன்




சுத்திகரிக்கப் பட்டதின் அடையாளமாக எழும்புகிறேன்




இதற்கிடையில்
தார்க்கதரிசி சொல்லுபவைகள் உங்களைத் தொடவில்லையா ?
நாங்கள் மாற வேண்டிய அவசியமில்லை




எருசலேமிலுள்ள ஆசாரியர் பரிசேயராகிய தலைவர்களின் சார்பில் புலனாய்வு செய்ய வந்துள்ளோம்




நீ தான் யோவான் ஸ்நானகனா? நீ தான் கிறிஸ்துவா ?
நான் கிறிஸ்து இல்லை; அவரது செருப்புகளின் வாரை அவிழ்க்கவும் எனக்குத் தகுதியில்லை.




பின் நீ யார்? எங்கிருந்து வந்தாய்? யாருடைய பெயரில் பேசுகிறாய்?




"தேவனுக்கு வழியை ஆயத்தப்படுத்துங்கள்", என வனாந்திரத்தில் ஒலிக்கும் குரலாயிருப்பவன் நான்.

நீ எதற்காக
மக்களுக்கு
ஞானஸ்நானம்
கொடுக்கிறாய்?

நான் நீரினால்
ஞானஸ்நானம்
கொடுக்கிறேன்

ஆனால் எனக்
குப்பின்வருபவர்
அக்கினியினால்
ஞானஸ்நானம்
கொடுப்பார்

விஷப்பாம்பின்
சந்ததியாரே...
எச்சரிக்கையுடன்
சிந்தியுங்கள்

ஆபிரகாம் உங்கள்
முற்பிதாவாயிருப்பதால்
உங்களுக்கு ஆபத்தில்லை
என எண்ண
வேண்டாம்

தேவனிடத்தில்
வஞ்சனையில்லை.
மரம் அதின் கனியினால்
அறியப்படும். இக்கல்லு,
களால் ஆபிரகாமுக்குப்
பிள்ளைகளை உண்டாக்க
தேவன் வல்லவர்.

வகைகாட்டினவன் யார்? மனந்திரும்புதலுக்கு ஏற்ற கனிகளைக் கொடுங்கள். ஆபிரகாம் எங்களுக்குத் தகப்பன் என்று உங்களுக்குள்ளே சொல்லிக்கொள்ள நினையாதிருங்கள், தேவன் இந்தக் கல்லுகளினாலே ஆபிரகாமுக்குப் பிள்ளைகளை உண்டு பண்ணவல்லவராயிருக்கிறார் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். இப்பொழுதே கோடரியானது மரங்களின் வேர் அருகே வைத்திருக்கிறது, ஆகையால் நல்ல கனிகொடாத மரமெல்லாம் வெட்டுண்டு அக்கினியிலே போடப்படும். மனந்திரும்புதலுக்கென்று நான் ஜலத்தினால் உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறேன். எனக்குப்பின் வருகிறவரோ என்னிலும் வல்லவராயிருக் கிறார், அவருடைய பாதரட்சைகளைச் சுமக்கிறதற்கு நான் பாத்திரன் அல்ல.அவர் பரிசுத்த ஆவியினாலும் அக்கினியினாலும் உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுப்பார்; தூற்றுக்கூடை அவர் கையில் இருக்கிறது, அவர் விளக்கி தமது கோதுமையைக் களஞ்சியத்தில்

அவ்வேளையில் நாசரேத்தூரானாகிய
இயேசு கூட்டத்தைவிட்டு

யோவான் ஸ்நானகனை
நோக்கி முன்வந்து



சேர்ப்பார். பதரையோ அவியாத அக்கினியினால் சுட்டெரிப்பார் என்றான். அப்பொழுது யோவானால் ஞானஸ்நானம் பெறுவதற்கு இயேசு கலிலேயாவைவிட்டு யோர்தானுக்கு அருகே அவனிடத்தில் வந்தார். யோவான் அவருக்குத் தடை செய்து, நான் உம்மாலே ஞானஸ்நானம் பெறவேண்டியதாயிருக்க நீர் என்னிடத்தில் வரலாமா என்றான். இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: இப்பொழுது.
















இடங்கொடு, இப்படி எல்லா நீதியையும் நிறைவேற்றுவது நமக்குஏற்றதாயிருக்கிறது என்றார். அப்பொழுது அவருக்கு இடங்கொடுத்தான். இயேசு ஞானஸ்நானம் பெற்று

ஜலத்திலிருந்து கரையேறினவுடனே இதோ வானம் அவருக்குத் திறக்கப்பட்டது. தேவ ஆவி புறாவைப்போல இறங்கி தம்மேல் வருகிறதைக் கண்டார். அன்றியும், வானத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாகி, இவர் என்னுடைய நேசகுமாரன், இவரில் பிரியமாயிருக்கிறேன், என்று உரைத்தது.



30 வயதில் யோர்தான் நதியில் இயேசு ஞானஸ்நானம் பெற்றார்.அவர் யார்? யோசேப்பின் மகன் என்றும் நாசரேத்தின் தச்சன் என்றும் அழைக்கப்பட்டார். அவர் தாய் யோவான்ஸ்நானகனின் தாயின் உறவுப் பெண்ணான மரியாள். இயேசுவின் பிறப்பைப் பற்றிய சில சம்பவங்களை அவரது பெற்றோர் சொல்லுகிறார்கள்.



யோசேப்பைத் திருமணம் செய்யும்படி மரியாள் நியமிக்கப்பட்டிருக்கையில் மரியாள் கருவுற்றவளானாள்




ஒரு ஓய்வுநாளில் மரியாளின் பெற்றோர் ஜெப ஆலயத்திலிருந்து வீட்டிற்க்குத் திரும்பி வந்தனர்.







லூக்கா: 1:26-38

ஆறாம் மாதத்திலே காபிரியேல் என்னும் தூதன், கலிலேயாவிலுள்ள நாசரேத்தென்னும் ஊரில் தாவீதின் வம்சத்தானாகிய யோசேப்பு என்கிற நாமமுள்ள புருஷனுக்கு நியமிக்கப்பட்டிருந்த ஒரு கன்னிகையினிடத்திற்கு தேவனாலே அனுப்பப்பட்டான்.அந்தக் கன்னிகையின் பேர் மரியாள். அவள் இருந்த வீட்டில் தேவதூதன் பிரவேசித்து,கிருபை பெற்றவளே, வாழ்க! கர்த்தர் உன்னுடனே இருக்கிறார்; ஸ்திரீகளுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்டவள் என்றான். அவளோ அவனைக் கண்டு அவன் வார்த்தையினால் கலங்கி இந்த வாழ்த்துதல் எப்படிப்பட்டதோ என்று சிந்தித்துக் கொண்டிருந்தாள். தேவதூதன் அவளை நோக்கி, "மரியாளே பயப்படாதே: நீ, தேவனிடத்தில் கிருபை பெற்றாய். அவருக்கு இயேசு என்று பேரிடுவாயாக. அவர் பெரியவராயிருப்பார்.உன்னதமானவருடைய குமாரன் என்னப்படுவார்.கர்த்தராகிய தேவன் அவருடைய பிதாவாகிய தாவீதின் சிங்காசனத்தை அவருக்குக் கொடுப்பார்; அவர் யாக்கோபின் குடும்பத்தாரை என்றென்றைக்கும் அரசாளுவார்; அவருடைய ராஜ்யத்துக்கு முடிவிராது என்றான்". அதற்கு மரியாள் தேவதூதனை நோக்கி: இது எப்படியாகும்? புருஷனை அறியேனே என்றாள் தேவதூதன் அவளுக்குப் பிரதியுத்தரமாக பரிசுத்த ஆவி உன்மேல் வரும் உன்னதமானவருடைய பலம் உன்மேல் நிழலிடும்; ஆதலால் உன்னிடத்தில் பிறக்கும் பரிசுத்தமுள்ளது தேவனுடைய குமாரன்

எனக்குப் புரியவில்லை கன்னியாகிய நான் எப்படிக் குழந்தை பெற முடியும்?

பரிசுத்த ஆவியானவரும் உன்னதமான தேவனுடைய பலமும் உன்மேல் வரும் நீ பெறும் குழந்தை பரிசுத்தமுள்ள தேவகுமாரனாயிருப்பார். உன் உறவினளாகிய எலிசபெத் தன் முதிர் வயதில் குழந்தை பெறப் போகிறாள். இது அவளுக்கு ஆறாவது மாதம் தேவனாலே கூடாத காரியம் ஒன்றுமில்லை!

நான் தேவனுக்கு அடிமை நீர் சொன்னபடியே நடக்கட்டும்

சில நாட்களுக்குப் பின்னர்

அம்மா நமது உறவினரான எலிசபெத் வீட்டில் சில வாரங்களை கழிக்க விரும்புகிறேன்

உண்மையாகவா முன் கூட்டியே எதுவும் சொல்லவில்லையே

நீ போவது எலிசபெத்துக்கும் சகரியாவுக்கும் மகிழ்ச்சியைத் தரும்.ஆனால் தூரமான யூதேயாவில் அல்லவா இருக்கிறார்கள்

எருசலேம் செல்லும் வழியில் நாசரேத் வரும் கூட்டத்தாருடன் நீ போகலாம்

மரியாள் யூதாவை நோக்கிப் பயணப்பட்டுச் செல்கிறாள்

கவனமாய் கொண்டு போய் சேர்க்கும் யாருடைய பொறுப்பிலாவது உன்னை அனுப்பி வைக்கிறேன்

எனக்குப் பயமில்லை. தேவன் என்னைப் பாதுகாப்பார் ,




நாசரேத்தின் மரியாளே, உனது உறவினரான எலிசபெத் வாழும் கிராமம் அதோ அந்தப்பள்ளத்தாக்கில் தான் உள்ளது.இதே வழியில் நீ போகலாம்

மிக்க நன்றி, தேவன் உங்களைப் பாதுகாப்பாராக,

மரியாள் வந்து சேர்ந்ததும்

எலிசபெத் அவர்களே, தேவ சந்தோஷமும் சமாதானமும் உங்களுக்குரியதாகும்

நாசரேத்தூர் மரியாளா, ஓ, என்ன ஆச்சிரியம்

என்ன நடக்கிறது என் வயிற்றிலுள்ளபிள்ளை திடீரென துள்ளிக்குதிக்கிறதே

மரியாளே, என்ன விஷயமாக வந்துள்ளாய்?

எதிர்பாராத பயண மல்லவா

ஓ , நீங்கள் குழந்தை பெறப்போவது அற்புதமல்லவா?

தேவன் எனக்குச் சொன்னவையாவும் உண்மை என உணருகிறேன்

முதலில் என் இரகசியத்தை உங்களுக்குச் சொல்ல வேண்டும்

மரியாளே, தேவன் உன்னிடம் சொல்வது நல்லதாகவே இருக்கும்

நான் ஒன்றைச் சொல்லட்டும்

உன் சத்தம் கேட்டதுமே என் வயிற்றிலுள்ள பிள்ளைதுள்ளிற்று மேசியாவைப் பெற்றெடுக்கும் நீ வந்தது எனக்கு பாக்கியமே

என்னப்படும்; இதோ உனக்கு இனத்தாளாயிருக்கிற எலிசபெத்தும் முதிர்வயதிலே, ஒரு புத்திரனைக் கர்ப்பந்தரித்திருக்கிறாள். மலடியென்னப்பட்ட அவளுக்கு இது ஆறாம் மாதம் தேவனாலே கூடாத காரியம் ஒன்றுமில்லை என்றான். அதற்கு மரியாள்: இதோ.நான் ஆண்டவருக்கு அடிமை, உம்முடைய வார்த்தையின்படி எனக்கு ஆகக்கடவது என்றாள். அப்பொழுது தேவதூதன் அவளிடத்திலிருந்து போய்விட்டான்.
















ஆறுமாதங்களுக்கு முன்பு ஊழியம் செய்யும்படி மற்ற 300 ஆசாரியருடன் சகரியா தேவாலயம் சென்றார்.









லுக்கா; 1:39-64
அந்நாட்களில் மரியாள் எழுந்து மலைநாட்டிலே யூதாவிலுள்ள ஒரு பட்டணத்திற்குத் தீவிரமாய்ப் போய். சகரியாவின் வீட்டுக்குள் பிரவேசித்து எலிசபெத்தை வாழ்த்தினாள். எலிசபெத்து மரியாளுடைய வாழ்த்துதலைக் கேட்டபொழுது அவளுடைய வயிற்றிலிருந்த பிள்ளை துள்ளிற்று: எலிசபெத்து பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டு உரத்த சத்தமாய்; ஸ்திரீகளுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்டவள்; உன் கர்ப்பத்தின் கனியும் ஆசீர்வதிக் கப்பட்டது; என் ஆண்டவருடைய தாயார் என்னிடத்தில் வந்தது எனக்கு எதினால் கிடைத்தது. இதோ, நீ வாழ்த்தின சத்தம் என் காதில் விழுந்தவுடனே என் வயிற்றிலுள்ள பிள்ளைகளிப்பாய்த்து ள்ளிற்று; விசுவாசித்தவளே பாக்கியவதி கர்த்தராலே அவளுக்குச் சொல்லப்பட்டவைகள் நிறைவேறும் என்றாள்; அப்பொழுது மரியாள், என் ஆத்தமா கர்த்தரை மகிமைப்படுத்துகிறது


காபிரியேல் தூதன் அவரிடம் உங்களுக்கு ஒரு மகன் பிறப்பான் என்றும் அவனுக்கு யோவான் எனப் பெயரிடும்படியும் கூறியுள்ளான்.


வரப்போகிற மேசியாவுக்கு வழியை ஆயத்தம் செய்வதே அவன் பணியாக இருக்கும்




தேவனே என் ஜெபம் உம்மிடம் கடந்து வருவதாக




என்ன நடக்கிறது? ஏதோ ஒன்றை வெளிப்படுத்தும்படி தேவன் தமது தூதனை என்னிடம் அனுப்புகிறார்.




எனக்கு வயதாயிற்று...இது நடக்காது என சகரியா சந்தேகித்தார்


அது முதல் அவர் ஊமையாயிருப்பதே அடையாளம் என்று தேவதூதன் சொல்லி விட்டான்.







மூன்று மாதங்கள் மரியாள் எலிசபெத்துடன் தங்கியபின் நாசரேத் திரும்பினாள். பின் எலிசபெத் ஒரு மகனைப் பெற்றாள். எட்டாம் நாளில் பிள்ளைக்கு விருத்தசேதனம் செய்யவும் பெயரிடவும் வேண்டிய சமயம் வந்தது.

விருத்தசேதனம் முடிந்துவிட்டது.







என் ஆவி என் இரட்சகராகிய தேவனில் களிகூருகிறது. அவர் தம்முடைய அடிமையின் தாழ்மையை நோக்கிப் பார்த்தார். இதோ இது முதல் எல்லாச் சந்ததிகளும் என்னைப் பாக்கியவதி என்பார்கள். வல்லமையுடையவர் மகிமையானவைகளை எனக்குச் செய்தார். அவருடைய நாமம் பரிசுத்தமுள்ளது. அவருடைய இரக்கம் அவருக்குப் பயந்திருக்கிறவர்களிக்குத் தலைமுறை தலைமுறைக்குமுள்ளது. தம்முடைய புயத்தினாலே பராக்கிரமஞ் செய்தார். இருதயசிந்தையில் அகந்தையுள்ளவர் களைச் சிதறடித்தார். பலவான்களை ஆசனங்களிலிருந்து தள்ளி தாழ்மையானவர்களை உயர்த்தினார். பசியுள்ளவர்களை நன்மைகளினால் நிரப்பி, ஐசுவரியமுள்ளவர்களை வெறுமையாய் அனுப்பிவிட்டார். நம்முடைய பிதாக்களுக்கு அவர் சொன்னபடியே ஆபிரகாமுக்கும் அவன் சந்ததிக்கும் என்றென்றைக்கும்






















இரக்கஞ்செய்ய நினைத்து,தம்முடைய தாசனாகிய இஸ்ரவேலை ஆதரித்தார் என்றாள். மரியாள் ஏறக்குறைய மூன்றுமாதம் அவளுடனே இருந்து தன் வீட்டுக்குத் திரும்பிப்போனாள். எலிசபெத்துக்குப் பிரசவகாலம் நிறைவேறினபோது அவள் ஒரு புத்திரனைப் பெற்றாள்.கர்த்தர் அவளிடத்தில் தம்முடைய இரக்கத்தை விளங்கப் பண்ணினாரென்று அவளுடைய அயலகத்தாரும் பந்து ஜனங்களும் கேள்விப்பட்டு அவளுடனே கூட சந்தோஷப்பட்டார்கள். எட்டாம் நாளிலே பிள்ளைக்கு விருத்தசேதனம் பண்ணும்படிக்கு அவர்கள் வந்து, அதின் தகப்பனுடைய நாமத்தின்படி அதற்குச் சகரியா என்று பேரிடப்போனார்கள். அப்போது அதின் தாய் அப்படியல்ல, அதற்கு யோவான் என்று பேரிட வேண்டும் என்றாள். அதற்கு அவர்கள் உன் உறவின் முறையாரில் இந்தப் பேருள்ளவன் ஒருவனும் இல்லையே என்று சொல்லி அதின் தகப்பனை நோக்கி இதற்கு என்ன பேரிட மனதாயிருக்கிறீர் என்று சைகையினால் கேட்டார்கள் அவன் எழுத்துப்பலகையைக் கேட்டுவாங்கி இவன் பேர் யோவான் என்று



















எழுதினான். எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்; உடனே அவனுடைய வாய் திறக்கப்பட்டு. அவனுடைய நாவும் கட்டவிழ்க்கப்பட்டு, தேவனை ஸ்தோத்திரித்துப் பேசினான்.

மத்தேயு: 1;18-25

இயேசு கிறிஸ்துவினுடைய ஜெநநத்தின் விவரமாவது; அவருடைய தாயாகிய மரியாள் யோசேப்புக்கு நியமிக்கப்பட்டிருக்கையில் அவர்கள் கூடிவருமுன்னே. அவள் பரிசுத்த ஆவியினாலே கரப்பவதியானாள் என்று காணப்பட்டது. அவள் புருஷனாகிய யோசேப்பு நீதிமானாயிருந்து அவளை அவமானப்படுத்த மனதில்லாமல் இரகசியமாய் அவளைத் தள்ளவிட யோசனை யாயிருந்தான். அவன் இப்படிச் சிந்தித்துக் கொண்டிருக்கையில் கர்த்தருடைய தூதன் சொப்பனத்தில் அவனுக்குக் காணப்பட்டு; தாவீதின் குமாரனாகிய யோசேப்பே. உன் மனைவியாகிய மரியாளைச்சேர்த்துக்கொள்ள ஐயப்படாதே. அவளிடத்தில் உற்பத்தியாயிருக்கிறது பரிசுத்த ஆவியினால் உண்டானது. அவள் ஒரு குமாரனைப் பெறுவாள் அவருக்கு இயேசு என்று பேரிடுவாயாக: ஏனெனில் அவர் தமது ஜனங்களின் பாவங்களை

ஒருநாள்
அதிகாலை
வேளையில்

என்ன
வித்தியாசமான
சொப்பனம்

சந்தேகமில்லை
தேவன் தன் தூதன் மூலம்
பேசியுள்ளார்,

ஆம், மரியாள்
பொய் சொல்லவில்லை
அவள் பெறப்போகும்
குழந்தை தேவனுடைய
செயல்தான்

அவரே
மேசியாவாக
இருப்பார்.

அவர்
தாவீதின்
வம்ச
வழியானவர்.

ஏனென்றால்
நானும்
மரியாளும்
தாவீதின்
வம்சத்தினர்

இக்குழந்தை
தீர்க்கதரிசன
நிறைவேறுதலே.

தேவசித்தம்
இப்போது
எனக்குப்
புரிகிறது

விரைவிலேயே மரியாளை
என் மனைவியாக்கிக்
கொள்வேன்

விரைவிலேயே யோசேப்பு
மரியாளின் திருமணம் நடைபெற்றது.






நீக்கி அவர்களை இரட்சிப்பார் என்றான். தீர்க்கதரிசியின் மூலமாய்க் கர்த்தரால் உரைக்கப்பட்டது நிறைவேறும்படி இதெல்லாம் நடந்தது. அவன்: இதோ ஒரு கன்னிகை கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள் அவருக்கு இம்மானுவேல் என்று பேரிடுவார்கள் என்று சொன்னான். இம்மானுவேல் என்பதற்குத் தேவன் நம்மோடிருக்கிறார் என்று அர்த்தமாம். யோசேப்பு நித்திரை தெளிந்து எழுந்து கர்த்தருடைய தூதன் தனக்குக் கட்டளையிட்டபடியே தன் மனைவியை சேர்த்துக்கொண்டு அவள் தன் முதற்பேறான குமாரனைப் பெறுமளவும் அவளை அறியாதிருந்து அவருக்கு இயேசு என்று பேரிட்டான்.

சில மாதங்களுக்குப்பின்
நாசரேத்தில்













சில நாட்களுக்குப் பின்னர்







கணக்கெடுப்பு
அலுவலகத்தில்







லூக்கா.2:1-20

அந்நாட்களில் உலகமெங்கும் குடிமதிப்பு எழுதப்படவேண்டுமென்று அகுஸ்துராயனால் கட்டளை பிறந்தது சீரியநாட்டிலே சிரேனியு என்பவன் தேசாதிபதியாயிருந்தபோது இந்த முதலாம் குடிமதிப்பு உண்டாயிற்று. அந்தப்படி குடிமதிப்பெழுதப்படும் படிக்கு எல்லாரும் தங்கள் தங்கள் ஊர்களுக்குப் போனார்கள். அப்பொழுது யோசப்பும், தான் தாவீதின் வம்சத்தானும் குடும்பத்தானுமாயிருந்த படியினாலே தனக்கு மனைவியாக நியமிக்கப்பட்டுக் கர்ப்பவதியான மரியாளுடனே குடிமதிப் பெழுதப்படும்படி கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத்தூரிலிருந்து யூதேயா நாட்டிலுள்ள பெத்லகேம் என்னும் தாவீதின் ஊருக்குப்












அன்று இரவில் மரியாள் தன்
முதல் மகனைப் பெற்றெடுத்தாள்.



அவள் மகனைத் துணியில் சுற்றி
முன்னணையில் கிடத்தினாள்.



போனான்.அவ்விடத்திலே அவர்கள் இருக்கையில், அவளுக்குப் பிரசவகாலம் நேரிட்டது. அவள் தன் முதற்பேறான குமாரனைப் பெற்று சத்திரத்திவே அவர்களுக்கு இடமில்லாதிருந்தபடியினால் பிள்ளையைத் துணிகளில் சுற்றி முன்னணையிலே கிடத்தினாள் அப்பொழுது அந்த நாட்டிலே மேய்ப்பர்கள் வயல்வெளியில் தங்கி இராத்திரியிலே தங்கள் மந்தையைக் காத்துக் கொண்டிருந்தார்கள், அவ்வேளையில் கர்த்தருடைய தூதன் அவர்களிடத்தில் வந்து நின்றான். கர்த்தருடைய மகிமை அவர்களைச் சுற்றிலும் பிரகாசித்தது; அவர்கள் மிகவும் பயந்தார்கள்; தேவதூதன் அவர்களை நோக்கி பயப்படாதிருங்கள்; இதோ, எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தியை உங்களுக்கு










மறு நாளில் இச்செய்தி வேகமாகப் பரவியது.

ஆபிரகாமுடன் தேவன் செய்த உடன்படிக்கையின் அடையாளமான விருத்தசேதனம் எட்டாவது நாளில் செய்யப்பட்டது.




அறிவிக்கிறேன். இன்று கர்த்தராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் உங்களுக்குத் தாவீதின் ஊரிலே பிறந்திருக்கிறார் பிள்ளையைத் துணிகளில் சுற்றி முன்னணையிலே கிடத்தியிருக்கக் காண்பீர்கள்; இதுவே உங்களுக்கு அடையாளம் என்றான். அந்தக் க்ஷணமே பரம சேனையின் திரள் இந்த தூதனுடனே தோன்றி: உன்னதத்திலிருக்கிற தேவனுக்கு மகிமையும், பூமியிலே சமாதானமும் மனுஷர்மேல் பிரியமும் உண்டாவதாக என்று சொல்லி தேவனைத் துதித்தார்கள். தேவதூதர்கள் அவர்களை விட்டுப் பரலோகத்துக்குப் போனபின்பு, மேய்ப்பர்கள் ஒருவரையொருவர் நோக்கி நாம் பெத்லகேம் ஊருக்குப்போய் நடந்ததாகக் கர்த்தரால் நமக்கு அறிவிக்கப்பட்ட இந்தக் காரியத்தைப் பார்ப்போம் வாருங்கள் என்று சொல்லி, தீவிரமாய் வந்து மரியாளையும் யோசேப்பையும் முன்னணையிலே கிடத்தியிருக்கிற பிள்ளையையும் கண்டார்கள்; கண்டு, அந்தப் பிள்ளையைக் குறித்துத்தங்களுக்குச் சொல்லப்பட்ட சங்கதியைப் பிரசித்தம் பண்ணினார்கள். மேய்ப்பராலே தங்களுக்குச் சொல்லப்பட்டதைக் கேட்ட யாவரும் அவைகளைக்குறித்து ஆச்சரியப்பட்டார்கள். மரியாளோ, அந்தச் சங்கதிகளையெல்லாம் தன் இருதயத்திலே வைத்து சிந்தனை பண்ணினாள். மேய்ப்பர்களும் தங்களுக்குச் சொல்லப்பட்டதின்படியே, கேட்டு கண்ட எல்லாவற்றிற்காகவும் தேவனை மகிமைப்படுத்தி, துதித்துக்கொண்டு திரும்பிப் போனார்கள்.






















லூக்கா:2.22-35

மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படியே அவர்களுடைய சுத்திகரிப்பின் நாட்கள் நிறைவேறினபோது முதற்பேறான எந்த ஆண்பிள்ளையும் கர்த்தருக்குப் பரிசுத்தமானதென்னப்படும் என்று கர்த்தருடைய நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடி அவரைக் கர்த்தருகென்று ஒப்புக்கொடுக்கவும்; கர்த்தருடைய நியாயப்பிரமாணத்தில் சொல்லியிருக்கிறபடி ஒரு ஜோடி காட்டுப்புறாவையாவது இரண்டு புறாக்குஞ்சுகளையாவது பலியாக செலுத்தவும் அவரை எருசலேமுக்குச் கொண்டு போனார்கள். அப்பொழுது சிமியோன் என்னும் பேர்கொண்ட ஒரு மனுஷன் எருசலேமில் இருந்தான். அவன் நீதியும் தேவபக்தியும் உள்ளவனாயும், இஸ்ரவேலின் ஆறுதல்வரக் காத்திருக்கிறவனாயும் இருந்தான்; அவன் மேல் பரிசுத்த ஆவி இருந்தார். கர்த்தருடைய கிறிஸ்துவை நீ காணுமுன்னே மரணமடையமாட்டாய் என்று பரிசுத்த ஆவியினாலே




அவனுக்கு அறிவிக்கப்பட்டுமிருந்து அவன் ஆவியின் ஏவுதலினால் தேவாலயத்திலே வந்திருந்தான். இயேசு என்னும் பிள்ளைக்காக நியாயப்பிரமாண முறைமையின்படி செய்வதற்குத் தாய் தகப்பன்மார் அவரை உள்ளேகொண்டு வருகையில், அவன் அவரைத் தன்கைகளில் ஏந்திக்கொண்டு தேவனை ஸ்தோத்தரித்து, ஆண்டவரே உமது வார்த்தையின்படி உமது அடியேனை இப்பொழுது சமாதானத்தோடே போகவிடுகிறீர், புறஜாதிகளுக்குப் பிரகாசிக்கிற ஒளியாகவும் உம்முடைய ஜனமாகிய இஸ்ரவேலுக்கு மகிமையாகவும் தேவரீர் சகல ஜனங்களுக்கு முன்பாக ஆயத்தம்பண்ணின உம்முடைய









இராஜாவே யூதருக்கு இராஜாவாகப் பிறந்துள்ள குழந்தையைத்தேடி சில வெளி நாட்டவர் வந்துள்ளனர்

வானத்தின் நட்சத்திரங்களை அடையாளமாகக் கொண்டு அவர்கள் வந்துள்ளனர்

என்னது? ராஜாவாகிய குழந்தையா? எனக்குத் தெரியாமலா? என் சிங்காசனத்துக்கு எதிரான சதியோ?

இவ்விஷயத்தில் நான் தந்திரமாக செயல்பட வேண்டும்

பரிசேயர்களை உடனே அழையுங்கள்

மேசியா வந்து விட்டதாகக் கேள்விப்படுகிறேன். நான் அதற்கு ஆயத்தமாக வேண்டும். அவரது குடும்பம், பிறப்பிடம் பற்றி உங்களுக்குத் தெரியுமா?

பரிசுத்த வேதாகமத்தின் படி மேசியா தாவீது ராஜாவின் பரம்பரையில் வருவார்.

தாவீது ராஜா பெத்லகேமைச் சேர்ந்தவர்

பெத்லகேமே, உன்னில் ஆளுகை செய்பவர் புறப்படுவார். அவர் என் ஜனங்களின் மேய்ப்பராயிருப்பார் என்று எழுதப்படுள்ளது.

சீக்கிரம் போய் அந்த ஞானிகளை இங்கே அழைத்து வா?

சிறிது நேரத்தில்

நீங்கள் மேசியாவாகிய குழந்தையைத் தேடுகிறீர்கள் என அறிந்தேன்.

ஆம்! அவரது நட்சத்திரத்தைக் கண்டோம்

இரட்சணியத்தை என் கண்கள் கண்டது என்றான் அவரைக் குறித்துச் சொல்லப்பட்டவைகளுக்காக யோசேப்பும் அவருடைய தாயாரும் ஆச்சரியப்பட்டார்கள். பின்னும் சிமியோன் அவர்களை ஆசீர்வதித்து அவருடையதாயாகிய மரியாளை நோக்கி, இதோ அநேகருடைய இருதய சிந்தனைகள் வெளிப்படத்தக்கதாக இஸ்ரவேலில் அநேகர் விழுகிறதற்கும் எழுந்திருக்கிறதற்கும் விரோதமாகப் பேசப்படும் அடையாளமாவதற்கும் இவர் நியமிக்கப்பட்டிருக்கிறார். உன் ஆத்துமாவையும் ஒரு பட்டயம் உருவிப்போகும் என்றான்.









அவர்கள் எருசலேமைவிட்டு பெத்லகேம் சென்றனர்.

அவர்கள் பிள்ளையைக் கண்டனர்.






மறுநாளில் அவர்கள் விழித்தெழுந்த போது






மத்தேயு:2.1-12

ஏரோது ராஜவின் நாட்களில் யூதேயாவிலுள்ள பெத்லகெமிலே இயேசு பிறந்தபொழுது, கிழக்கிலிருந்து சாஸ்திரிகள் எருசலேமுக்கு வந்து யூதருக்கு ராஜாவாகப் பிறந்திருக்கிறவர் எங்கே? கிழக்கிலே அவருடைய நட்சத்திரத்தைக் கண்டு அவரைப் பணிந்து கொள்ள வந்தோம் என்றார்கள். ஏரோதுராஜா அதைக் கேட்டபொழுது, அவனும் அவனோடுகூட எருசலேம் நகரத்தார் அனைவரும் கலங்கினார்கள். அவன் பிரதான ஆசாரியர் ஜனத்தின் வேதபாரகர் எல்லோரையும் கூடிவரச் செய்து, கிறிஸ்துவானவர் எங்கே பிறப்பாரென்று அவர்களிடத்தில் விசாரித்தான்; அதற்கு அவர்கள்.

யூதேயாவிலுள்ள பெத்லகெமிலே பிறப்பார்; அதேனென்றால் யூதேயா தேசத்திலுள்ள பெத்லகேமே யூதாவின் பிரபுக்களில் நீ சிறியதல்ல என் ஜனமாகிய இஸ்ரவேலை ஆளும் பிரபு உன்னிடத்திலிருந்து புறப்படுவார் என்று தீர்க்கதரிசியினால் எழுதப்பட்டிருக்கிறது என்றார்கள்; அப்பொழுது ஏரோது சாஸ்திரிகளை இரகசியமாய் அழைத்து நட்சத்திரம் காணப்பட்ட

சில நாட்கள் ஏரோது காத்திருந்தான்.




















சில காலம் அங்கிருந்த பின் யோசேப்பும் மரியாளும் கலிலேயாவிலுள்ள நாசரேத்திற்கு திரும்பிவந்தனர். அங்கே இயேசு சரீர வளர்ச்சியிலும் ஞானத்திலும் விருத்தியடைந்தார். தம் பெற்றோருக்கு அவர் கீழ்ப்படிதலுள்ளவராயிருந்தார். முப்பதாவது வயதில் அவர் யோவான் ஸ்நானகனிடம் சென்று ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டார்.

காலத்தைக்குறித்து அவர்களிடத்தில் திட்டமாய் விசாரித்து; நீங்கள் போய் பிள்ளையைக்குறித்து திட்டமாய் விசாரியுங்கள்; நீங்கள் அதைக் கண்டபின்பு நானும் வந்து அதைப்பணிந்து கொள்ளும்படி எனக்கு அறிவியுங்கள் என்று சொல்லி அவர்களைப் பெத்லகேமுக்கு அனுப்பினான். ராஜா சொன்னதை, அவர்கள் கேட்டுப் போகையில் இதோ அவர்கள் கிழக்கிலே கண்டநட்சத்திரம் பிள்ளை இருந்த ஸ்தலத்திற்கு மேல் வந்து நிற்கும்வரைக்கும் அவர்களுக்குமுன் சென்றது. அவர்கள் அந்த வீட்டுக்குள் பிரவேசித்து பிள்ளையையும் அதின் தாயாகிய மரியாளையும் கண்டு சாஷ்டாங்கமாய் விழுந்து அதைப் பணிந்துகொண்டு தங்கள் பொக்கிஷங்களைத் திறந்து பொன்னையும் தூபவர்க்கத்தையும் வெள்ளைப்போளத்தையும் அதற்குக் காணிக்கையாக வைத்தார்கள். பின்பு அவர்கள் ஏரோதினிடத்திற்குத் திரும்பிப் போகவேண்டாமென்று சொப்பனத்தில் தேவனால் எச்சரிக்கப்பட்டு வேறு வழியாய்த் தங்கள் தேசத்திறுகுத் திரும்பிப்போனார்கள்.



ஒரு நாள் இயேசு போவதை யோவான்ஸ்நானகன் கண்டு...













அவரோடு சிலமணி நேரம் செலவு செய்தனர்



















பிலிப்பு இதைத் தன் நண்பனுக்கு சொல்லும்படி வேகமாய் சென்றான்















யோவான்:1.35-42

மறுநாளிலே யோவானும் அவனுடைய சீஷரில் இரண்டுபேரும் நிற்கும்போது, இயேசு நடந்துபோகிறதை அவன் கண்டு இதோ தேவ ஆட்டுக்குட்டி என்றான். அவன் அப்படிச் சொன்னதை அவ்விரண்டு சீஷருங்கேட்டு இயேசுவுக்குப் பின்சென்றார்கள். இயேசு திரும்பி அவர்கள் பின் செல்லுகிறதைக் கண்டு என்ன தேடுகிறீர்கள்; என்றார். அதற்கு அவர்கள் ரபீ நீர் எங்கே தங்கியிருக்கிறீர் என்று கேட்டார்கள்: ரபீ என்பதற்குப் போதகரே என்று அர்த்தமாம். அவர்: வந்து பாருங்கள் என்றார். அவர்கள் வந்து அவர் தங்கியிருந்த இடத்தைக் கண்டு அன்றையத்தினம் அவரிடத்தில் தங்கினார்கள். அப்பொழுது ஏறக்குறையப் பத்துமணி வேளையாயிருந்தது. யோவான் சொன்னதைக் கேட்டு அவருக்குப் பின்சென்ற இரண்டுபேரில் ஒருவன் சீமோன் பேதுருவின் சகோதரனாகிய அந்திரேயா என்பவன். அவன் முதலாவது தன் சகோதரனாகிய சீமோனைக் கண்டு மேசியாவைக்கண்டோம் என்று சொன்னான்; மேசியா என்பதற்கு கிறிஸ்து என்று அர்த்தமாம். பின்பு அவனை இயேசுவினிடத்தில் கூட்டிக் கொண்டுவந்தான். இயேசு அவனைப் பார்த்து: நீ யோனாவின் மகனாகிய சீமோன் நீ கேபா என்னப்படுவாய் என்றார்: கேபா என்பதற்குப் பேதுரு என்று அர்த்தமாம்.


அதோ,
நாத்தான்வேலும்
நண்பர்களும்:
வருக,வருக,


நான்தான் விழாவின் பொறுப்பாளர். உங்களை நான்தான் கவனிக்க வேண்டும்




இயேசுவும் வந்துள்ளாரே
யார் இயேசுவா? அவரைப் பற்றி பலரும் பேசுகிறார்கள்


அவர் தாய் மரியாள்தான் வேலைக்காரர்களுக்கு பொறுப்பு. நான் சென்று சொல்லுகிறேன்


















யோவான்:2.1-11

மூன்றாம் நாளிலே கலிலேயாவிலுள்ள கானா ஊரிலே ஒரு கலியாணம் நடந்தது. இயேசுவின் தாயும் அங்கேயிருந்தாள். இயேசுவும் அவருடைய சீஷரும் அந்தக் கலியாணத்துக்கு அழைக்கப்பட்டிருந்தார்கள். திராட்சைரசம் குறைவுபட்ட போது இயேசுவின் தாய் அவரை நோக்கி: அவர்களுக்குத் திராட்சை ரசம் இல்லை என்றாள். அதற்கு இயேசு: ஸ்திரியே, எனக்கும் உனக்கும் என்ன என் வேளை இன்னும் வரவில்லை: என்றார். அவருடையதாய் வேலைக்காரரை நோக்கி: அவர் உங்களுக்கு என்ன சொல்லுகிறாரோ அதின்படி செய்யுங்கள் என்றாள். யூதர்கள் தங்களைச் சுத்திகரிக்கும் முறைமையின் படியே ஒவ்வொன்றும் இரண்டு மூன்று குடம் தண்ணீர் கொள்ளத்தக்க ஆறு கற்சாடிகள் அங்கே வைத்திருந்தது. இயேசு வேலைக்காரரை நோக்கி ஜாடிகளிலே தண்ணீர் நிரப்புங்கள்; என்றார். அவர்கள் அவைகளை நிறைய நிரப்பினார்கள். அவர் அவர்களை நோக்கி: நீங்கள் இப்பொழுது மொண்டு பந்திவிசாரிப்புக்காரனிடத்தில் கொண்டு


























போங்கள் என்றார்.அவர்கள் கொண்டு போனார்கள். அந்தத் திராட்சைரசம் எங்கேயிருந்து வந்ததென்று தண்ணீரை மொண்ட வேலைக்காரருக்கு தெரிந்ததேயன்றி பந்திவிசாரிப்புக்காரனுக்குத் தெரியாததினால் அவன் திராட்சைரசமாய் மாறின தண்ணீரை ருசிபார்த்தபோது மணவாளனை அழைத்து: எந்தமனுஷனும் முன்பு நல்ல திராட்சைரசத்தைக் கொடுத்து ஜனங்கள் திருப்தியடைந்தபின்பு ருசி குறைந்ததைக் கொடுப்பான். நீரோ நல்ல இரசத்தை இதுவரைக்கும் வைத்திருந்தீரே: என்றான். இவ்விதமாக இயேசு இந்த முதலாம் அற்புதத்தைக் கலிலேயாவிலுள்ள கானா ஊரிலே செய்து தம்முடைய மகிமையை வெளிப்படுத்தினார். அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் விசுவாசம் வைத்தார்கள்.




























லூக்கா: 4.38-40

பின்பு அவர் ஜெப ஆலயத்தை விட்டுப் புறப்பட்டு, சீமோன் வீட்டில் பிரவேசித்தார்.சீமோனுடைய மாமி கடும் ஜுரமாய்க் கிடந்தாள்: அவளுக்காக அவரை வேண்டிக்கொண்டார்கள். அவர் அவளிடத்தில் குனிந்து நின்று ஜுரம் நீங்கும்படி கட்டளையிட்டார். அது அவளை விட்டு நீங்கிற்று: உடனே அவள் எழுந்திருத்து அவர்களுக்குப் பணிவிடை செய்தாள். சூரிய அஸ்தமித்தபோது ஜனங்களெல்லாரும் தங்களுக்குள் பலபல வியாதிகளால் வருத்தப்பட்டவர்களை அவரிடத் கொண்டுவந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவர் மேலும் அ தம்முடைய கைகளை வைத்து அவர்களைச் சொஸ்தமாக்கினா

மறுநாள் விடியற்காலையில்






திரள் கூட்டம் பின் தொடர அங்கு இயேசு வந்தார்









இரவும் பகலும் அம்மனிதன் தூங்கும் போதும் விழித்திருக்கும் போதும் விதை முளைத்து வளர்ந்தது







லூக்கா: 5.1-11

பின்பு அவர் கெனேசரேத்துக் கடலருகே நின்றபோது திரளான ஜனங்கள் தேவவசனத்தைக் கேட்கும்படி அவரிடத்தில் நெருங்கினார்கள்.அப்பொழுது கடற்கரையிலே நின்று இரண்டு படவுகளைக் கண்டார். மீன்பிடிக்கிறவர்கள் அவைகளை விட்டிறங்கி வலைகளை அலைசிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது அந்தப் படவுகளில் ஒன்றில் ஏறினார். அது சீமோனுடைய தாயிருந்தது. அதைக் கரையிலிருந்து சற்றே தள்ளும்படி அவனைக் கேட்டுக்கொண்டு அந்தப் படவில் உட்கார்ந்து ஜனங்களுக்குப் போதகம்பண்ணினார். அவர் போதகம் பண்ணி முடித்த பின்பு சீமோனை நோக்கி ஆழத்திலே தள்ளிக்கொண்டுபோய் மீன் பிடிக்கும் படி உங்கள்
















வலைகளைப் போடுங்கள் என்றார். அதற்குச் சீமோன்: ஐயரே, இரவு முழுவதும் நாங்கள் பிரயாசப்பட்டும் ஒன்றும் அகப்படவில்லை. ஆகிலும் உம்முடைய வார்த்தையின்படியே வலையைப் போடுகிறேன் என்றான். அந்தப்படியே அவர்கள் செய்து தங்கள் வலை கிழிந்துபோகத்தக்கதாக மிகுதியான மீன்களைப் பிடித்தார்கள். அப்பொழுது மற்றப் படகிலிருந்த கூட்டாளிகள் வந்து தங்களுக்கு உதவி செய்யும்படிக்குச் சைகை காட்டினார்கள். அவர்கள் வந்து இரண்டு படவுகளும் அமிழத்தக்கதாக நிரப்பினார்கள். சீமோன் பேதுரு அதைக்




















அவர்கள் தங்கள் படகுகளையும், வலை களையும் விட்டு விட்டு இயேசுவுக்குப் பின் சென்றார்கள்.



கண்டு இயேசுவின் பாதத்தில் விழுந்து, ஆண்டவரே, நான் பாவியான மனுஷன், நீர் என்னைவிட்டுப் போகவேண்டும் என்றான். அவர்கள் திரளான மீன்களைப் பிடித்ததினிமித்தம் அவனுக்கும் அவனோடுகூட இருந்த யாவருக்கும் பிரமிப்புண்டானபடியினால் அப்படிச்சொன்னான். சீமோனுக்கு கூட்டாளிகளான செபெதேயுவின் குமாரனாகிய யாக்கோபும் யோவானும் அந்தப்படியே பிரமித்தார்கள். அப்பொழுது இயேசு சீமோனை நோக்கி; பயப்படாதே இதுமுதல் நீ மனுஷரை பிடிக்கிறவனாயிருப்பாய் என்றார். அவர்கள் படவுகளைக் கரையிலே கொண்டுபோய் நிறுத்தி எல்லாவற்றையும் விட்டு அவருக்குப் பின்சென்றார்கள்.









தொற்று வியாதியுடையோர் இயேசு நகர வாசலுக்கருகே வரும்வரை ஆவலுடன் காத்திருந்தனர்.




மத்தேயு:4.23-25

பின்பு, இயேசு கலிலேயா எங்கும் சுற்றி நடந்து, அவர்களுடைய ஜெப ஆலயங்களில் உபதேசித்து, ராஜ்யத்தின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, ஜனங்களுக்கு உண்டாயிருந்த சகல வியாதிகளையும் சகல நோய்களையும் நீக்கிச் சொஸ்தமாக்கினார், அவருடைய கீர்த்தி சீரியா எங்கும் பிரசித்தமாயிற்று. அப்பொழுது பலவிதவியாதிகளையும் வேதனைகளையும் அடைந்திருந்த சகல பிணியாளிகளையும் பிசாசு பிடித்தவர்களையும், சந்திரரோகிகளையும், திமிர்வாதக்காரரையும் அவரிடத்தில் கொண்டுவந்தார்கள் அவர்களைச் சொஸ்தமாக்கினார். கலிலேயாவிலும், தெக்கப்போலியிலும், எருசலேமிலும், யூதேயாவிலும், யோர்தானுக்கு அப்புறத்திலும் இருந்து திரளான ஜனங்கள் வந்து, அவருக்குப்பின் சென்றார்கள்.



















லூக்கா:5.12-14
பின்பு அவர் ஒரு பட்டணத்தில் இருக்கையில் குஷ்டரோகம் நிறைந்த ஒரு மனுஷன் இயேசுவைக் கண்டு முகங்குப்புறவிழுந்து ஆண்டவரே, உமக்குச்சித்தமானால் என்னைச் சுத்தமாக்க உம்மாலே ஆகும் என்று அவரை வேண்டிக் கொண்டான். அவர் தமது கையை நீட்டி அவனைத் தொட்டு எனக்குச் சித்தமுண்டு சுத்தமாகு என்றார். உடனே குஷ்டரோகம் அவனை விட்டு நீங்கிற்று. அவர் அவனை நோக்கி நீ இதை ஒருவருக்கும் சொல்லாமல் போய் உன்னை ஆசாரியனுக்குக் காண்பித்து நீ சுத்தமானதினிமித்தம் மோசே கட்டளையிட்டபடியே அவர்களுக்குச் சாட்சியாகப் பலி செலுத்து என்று கட்டளையிட்டார்.






















மத்தேயு:9.9-13

இயேசு அவ்விடம் விட்டு புறப்பட்டுப்போகையில், ஆயத்துறையில் உட்கார்ந்திருந்த மத்தேயு என்னும் ஒருமனுஷனைக் கண்டு, எனக்குப்பின் சென்று வா என்றார்; அவன் எழுந்து அவருக்குப்பின் சென்றான். பின்பு அவர் வீட்டிலே போஜனப் பந்தியிருக்கையில், அநேக ஆயக்காரரும் பாவிகளும் வந்து, இயேசுவோடும் அவர் சீஷரோடுங்கூட பந்தியிருந்தார்கள். பரிசேயர் அதைக்கண்டு, அவர்களுடைய சீஷர்களை நோக்கி: உங்கள் போதகர் ஆயக்காரரோடும் பாவிகளோடும் போஜனம் பண்ணுகிறதென்ன வென்று கேட்டார்கள். இயேசு அதைக்கேட்டு: பிணியாளிகளுக்கு வைத்தியன் வேண்டியதேயல்லாமல் சுகமுள்ளவர்களுக்கு வேண்டியதில்லை. பலியையல்ல: இரக்கத்தையே விரும்புகிறேன் என்பதின் கருத்து இன்னதென்று போய்க் கற்றுக்கொள்ளுங்கள்; நீதிமான்களையல்ல,பாவிகளையே மனந்திரும்புகிறதற்கு அழைக்க வந்தேன் என்றார்.

அதன் பின் ஒரு மாலை வேளையில்...






மெய்யாகவா!







ஒரு நாள் கப்பர்நகூமிலுள்ள யாவரும் சீமோனுடைய வீட்டில் கூடி வந்து இயேசுவின் போதனையைக் கேட்க விரும்பினர்.










மாற்கு:2.1-12

சில நாட்களுக்குப் பின்பு அவர் மறுபடியும் கப்பர்நகூமுக்குப் போனார்; அவர் வீட்டிலிருக்கிறாரென்று ஜனங்கள் கேள்விப்பட்டு உடனே வாசலுக்கு முன்னும் நிற்க இடம்போதாதபடிக்கு அநேகர் கூடிவந்தார்கள்; அவர்களுக்கு வசனத்தைப் போதித்தார். அப்பொழுது நாலுபேர் ஒரு திமிர்வாதக்காரனைச் சுமந்துகொண்டு அவரிடத்தில் வந்தார்கள்: ஜனக்கூட்டத்தினிமித்தம் அவருக்குச் சமீபமாய்ச்






கூரையானது பிரிப்பதற்கு வசதியாக மண்ஓடுகளால் மூடப்பட்டிருந்தது அதை அவர்கள் திறந்தனர்.










சேரக்கூடாமல் அவர் இருந்த வீட்டின் மேற்கூரையைப் பிரித்துத் திறப்பாக்கி, திமிர்வாதக்காரன் கிடக்கிற படுக்கையை இறக்கினார்கள். இயேசு அவர்கள் விசுவாசத்தைக் கண்டு: மகனே, உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டது: என்றார். அங்கே உட்கார்ந்திருந்த வேதபாரகரில் சிலர் இவன் இப்படித் தேவதூஷணம் சொல்லுகிறதென்ன? தேவன் ஒருவரேயன்றிப் பாவங்களை மன்னிக்கத்தவர் யார் என்று தங்கள் இருதயங்களில் சிந்தித்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் தங்களுள்ளே இப்படிச் சிந்திக்கிறார்களென்று இயேசு உடனே தம்முடைய ஆவியில் அறிந்து அவர்களை நோக்கி நீங்கள் உங்கள் இருதயங்களில் இப்படிச் சிந்திக்கிறதென்ன? உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டதென்று சொல்வதோ எழுந்து உன் படுக்கையை






















எடுத்துக்கொண்டு நடவென்று சொல்வதோ, எது எளிது? பூமியிலே பாவங்களை மன்னிக்க மனுஷகுமாரனுக்கு அதிகாரம் உண்டென்பதை நீங்கள் அறியவேண்டும் என்று சொல்லி, திமிர்வாதக்காரனை நோக்கி: நீ எழுந்து உன் படுக்கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப் போ என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார். உடனே அவன் எழுந்து தன் படுக்கையை எடுத்துக்கொண்டு எல்லாருக்கு முன்பாகப் போனான். அப்பொழுது எல்லாரும் ஆச்சரியப்பட்டு: நாம் ஒருக்காலும் இப்படிக்கண்டதில்லையென்று சொல்லி தேவனை மகிமைப்படுத்தினார்கள்.

சில நாட்களுக்குப்பின் மகதலா என்ற
சீமோன் என்ற பணக்காரன் வீட்டு முன்பு...






இயேசு வந்த போது முழு கிராமமும் அவருக்காக காத்திருந்தது.















லூக்கா:7.36-50
பரிசேயரில் ஒருவன் தன்னுடனே போஜனம் பண்ணவேண்டுமென்று அவரை வேண்டிக்கொண்டான்; அவர் அந்தப் பரிசேயனுடைய வீட்டில் பிரவேசித்துப் பந்தியிருந்தார். அப்பொழுது அந்த ஊரிலிருந்த பாவியாகிய ஒரு ஸ்தீரி அவர் பரிசேயன் வீட்டிலே பந்தியிருக்கிறதை அறிந்து ஒரு பரணியில் பரிமள தைலம் கொண்டு வந்து, அவருடைய பாதங்களின் அருகே பின்னாக நின்று அழுது கொண்டு, அவருடைய பாதங்களைத் தன் கண்ணீரினால் நனைத்துத் தன் தலைமயிரினால் துடைத்து, அவருடைய பாதங்களை முத்தஞ்செய்து பரிமளதைலத்தைப் பூசினாள். அவரை அழைத்த பரிசேயன்




அதைக் கண்டபோது, இவர் தீர்க்கதரிசியாயிருந்தால் தம்மைத் தொடுகிற ஸ்திரீ இன்னாளென்றும் இப்படிப்பட்டவளென்றும் அறிந்திருப்பார்; இவள் பாவியாயிருக்கிறாளே என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டான். இயேசு அவனை நோக்கி: சீமோனே உனக்கு நான் ஒரு காரியம் சொல்லவேண்டும் என்றார். அதற்கு அவன் போதகரே, சொல்லும் என்றான் அப்பொழுது அவர் ஒருவனிடத்தில் இரண்டுபேர் கடன்பட்டிருந்தார்கள்; ஒருவன் ஐந்நூறு வெள்ளிக்காசும், மற்றவன் ஐம்பது வெள்ளிக்காசும் கொடுக்கவேண்டியதாயிருந்தது. கொடுக்க அவர்களுக்கு நிர்வாகமில்லாதபோது இருவருக்கும் கடனை மன்னித்துவிட்டான். இப்படியிருக்க அவர்களில் எவன் அவனிடத்தில் அதிக அன்பாயிருப்பான்? அதைச்சொல் என்றார்.










மக்தலாவைச் சேர்ந்த மரியாள் என்ற அப்பெண் அன்று முதல் இயேசுவைப் பின்பற்ற ஆரம்பித்தாள்.



சீமோன் பிரதியுத்தரமாக: எவனுக்கு அதிகமாய் மன்னித்துவிட்டானோ அவனே அதிக அன்பாயிருப்பான் என்று நினைக்கிறேன் என்றான்; அதற்கு அவர்: சரியாய் நிதானித்தாய் என்று சொல்லி, ஸ்திரீயிடமாய்த் திரும்பி, சீமோனை நோக்கி: இந்த ஸ்திரீயைப் பார்க்கிறாயே; நான் உன் வீட்டில் பிரவேசித்தேன், நீ என் கால்களுக்குத் தண்ணீர் தரவில்லை, இவளோ, கண்ணீரினால் என் கால்களை நனைத்து, தன் தலைமயிரினால் அவைகளைத் துடைத்தாள். நீ என்னை முத்தஞ் செய்யவில்லை, இவளோ நான் உட்பிரவேசித்தது முதல் என்பாதங்களை ஓயாமல் முத்தஞ்செய்தாள். நீ என் தலையில் எண்ணெய் பூசவில்லை, இவளோ என் பாதங்களில் பரிமளதைலம் பூசினாள். ஆதலால் நான் உனக்குச் சொல்லுகிறேன்; இவள் செய்த அநேக பாவங்கள் மன்னிக்கப்பட்டது; இவள் மிகவும் அன்பு கூர்ந்தாளே. எவனுக்குக் கொஞ்சம் மன்னிக்கப்படுகிறதோ, அவன் கொஞ்சமாய் அன்புகூருவான் என்று சொல்லி; அவளை நோக்கி: உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்றார். அப்பொழுது கூடப் பந்தியிருந்தவர்கள் பாவங்களை மன்னிக்கிற இவன் யார் என்று தங்களுக்குள்ளே சொல்லிக் கொண்டார்கள். அவர் ஸ்திரீயை நோக்கி; உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது, சமாதானத்தோடே போ எனன்றார்.

கலிலேயா வழியே பயணம் செய்து இயேசு தன் சீஷர்களுடன் நாயீன் என்ற கிராமத்துக்கு வந்தார்.

அடடே, யாரோ ஒருவரை அடக்கம் செய்ய செல்கிறார்கள்

யார் இறந்து போனது!

ஒரு விதவைப் பெண்ணின் ஒரே மகன் மரித்துப் போனான். அவள் கடும் துயரத்திலுள்ளாள்.




வாலிபனே, எழுந்திரு!

பார், அந்தப் பையன் எழும்புகிறான்.

இது போன்ற ஒன்றை நான் கண்டதேயில்லை

நான் எங்கு இருக்கிறேன்?

பெண்ணே! உன் மகனை உனக்குத் திரும்பத் தருகிறேன்

என் மகனே தேவனுக்கு துதி செலுத்து

இந்த மனிதன் யார்?

அருகிலுள்ள நாசரேத்தைச் சேர்ந்தவர்

தேவன் நம்மை மறக்கவில்லை. ஒரு புதிய தீர்க்கதரிசி நமக்காக தோன்றியுள்ளார்.

என்ன அற்புதம்! இயேசு மரணமடைந்தவரை எழுப்பி விட்டாரே

லூக்கா: 7.11-17

மறுநாளிலே அவர் நாயீன் என்னும் ஊருக்குப் போனார் அவருடைய சீஷர் அநேகரும் திரளான ஜனங்களும் அவருடனேகூடப் போனார்கள் அவர் ஊரின் வாசலுக்குச் சமீபித்தபோது மரித்துப்போன ஒருவனை அடக்கம் பண்ணும்படி கொண்டு வந்தார்கள். அவன் தன் தாய்க்கு ஒரே மகனாயிருந்தான். ஊராரில் வெகு ஜனங்கள் அவளுடனேகூட வந்தார்கள்.கர்த்தர் அவளைப் பார்த்து அவள் மேல் மனதுருகி அழாதே என்று சொல்லி கிட்டவந்து பாடையைத் தொட்டார்;அதைச் சுமந்தவர்கள் நின்றார்கள். அப்பொழுது அவர் வாலிபனே எழுந்திரு என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார் மரித்தவன் எழுந்து உட்கார்ந்து பேசத் தொடங்கினான் அவனை அவன் தாயினிடத்தில் ஒப்புவித்தார்.எல்லாரும் பயமடைந்து மகா தீர்க்கதரிசியானவர் நமக்குள்ளே ரோதன்றியிருக்கிறார் என்றும்.தேவன் தமது ஜனங்களைச் சந்தித்தார் என்றும் சொல்லி தேவனை மகிமைப்படுத்தினார்கள். இந்தச் . செய்தி யூதேயா தேசமுழுவதிலும் சுற்றியிருக்கிற திசைகள் யாவற்றிலும் பிரசித்தமாயிற்று.

இயேசுவின் போதனைகளைக் கேட்க திபேரியாக்கடல் கடலருகே திரளானோர் கூடி வந்தனர். இயேசு அவர்களை அமைதலான ஓரிடத்திற்கு அழைத்துச் சென்று மாலை வரை பேசினார்....
















யோவான்:6.1-15

இவைகளுக்குப்பின்பு இயேசு திபேரியாக்கடல் என்னப்பட்ட கலிலேயாக் கடலில் அக்கரைக்குப் போனார் அவர் வியாதிக்காரிடத்தில் செய்த அற்புதங்களைத் திரளான ஜனங்கள் கண்டபடியால் அவருக்குப் பின் சென்றார்கள். இயேசு மலையின்மேல் ஏறி அங்கே தம்முடைய சீஷருடனே கூட உட்கார்ந்தார் அப்பொழுது யூதருடைய பண்டிகையாகிய பஸ்கா சமீபமாயிருந்தது. இயேசு தம்முடைய கண்களை ஏறெடுத்து திரளான ஜனங்கள் தம்மிடத்தில் வருகிறதைக் கண்டு பிலிப்புவை நோக்கி. அவர்கள் சாப்பிடத்தக்கதாக, அப்பங்களை எங்கே கொள்ளலாம் என்று கேட்டார். தாம் செய்யப்போகிறதை அறிந்திருந்தும் அவனைச் சோதிக்கும்படி இப்படிக்கேட்டார் பிலிப்பு.அவருக்குப் பிரதியுத்தரமாக; இவர்களில் ஒவ்வொருவனும் கொஞ்சங் கொஞ்சம் எடுத்துக்கொண்டாலும், இரு நூறு பணத்து அப்பங்களும் இவர்களுக்குப் போதாதே என்றான் அப்பொழுது அவருடைய சீஷரிலொருவனும் சீமோன் பேதுருவின் சகோதரனுமாகிய அந்திரேயா அவரை நோக்கி; இங்கே ஒரு பையன் இருக்கிறான் அவன் கையில் ஐந்து வாற்கோதுமை அப்பங்களும் இரண்டு மீன்களும் உண்டு ஆனாலும் அவைகள் இத்தனை ஜனங்களுக்கு எம்மாத்திரம் என்றான். இயேசு ஜனங்களை உட்காரவையுங்கள் என்றார். இந்த இடம் மிகுந்த புல்லுள்ளதாயிருந்தது; பந்தியிருந்த புருஷர்கள் ஏறக்குறைய ஐயாயிரம் பேராயிருந்தார்கள். இயேசு அந்த அப்பங்களை எடுத்து ஸ்தோத்திரம் பண்ணி சீஷர்களிடத்தில் கொடுத்தார் சீஷர்கள் பந்தியிருந்தவர்களுக்குக் கொடுத்தார்கள் அவர்கள் திருப்தியடைந்தபின்பு அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி







இதைப் பற்றி பலரும் பேசிக் கொண்டனர்













அதன் பின்பு இயேசு தன் சீஷர்களை செசரியாவின் வடபகுதிக்கு அழைத்துச் சென்றார் (இன்று அது கோலான் குன்றுகள் என அழைக்கப்படுகிறது)



ஒன்றும் சேதமாய்ப் போகாதபடிக்கு மீதியான துணிக்கைகளைச் சேர்த்து வையுங்கள் என்றார். அந்தப்படியே சேர்த்து வாற்கோதுமை அப்பங்கள் ஐந்தில் அவர்கள் சாப்பிட்டு மீதியான துணிக்கைகளினாலே பன்னிரண்டு கூடைகளை நிரப்பினார்கள். இயேசு செய்த அற்புதத்தை அந்த மனுஷர் கண்டு மெய்யாகவே இவர் உலகத்தில் வருகிறவரான தீர்க்கதரிசி என்றார்கள் ஆதலால் அவர்கள் வந்து தம்மை ராஜாவாக்கும்படி பிடித்துக்கொண்டு போக மனதாயிருக்கிறார்களென்று இயேசு அறிந்து மறுபடியும் விலகி தனியே மலையின்மேல் ஏறினார்.













மத்தேயு: 16.13-17

பின்பு இயேசு பிலிப்புச் செசரியாவின் திசைகளில் வந்தபோது தம்முடைய சீஷரை நோக்கி; மனுஷகுமாரனாகிய என்னை ஜனங்கள் யார் என்று சொல்லுகிறார்கள் என்று கேட்டார் அதற்கு அவர்கள் சிலர் எரேமியா அல்லது தீர்க்கதரிசிகளில் ஒருவர் என்றும் சொல்லுகிறார்கள் என்றார்கள்; அப்பொழுது அவர்: நீங்கள் என்னை யார் என்று சொல்லுகிறீர்கள் என்று கேட்டார் சீமோன் பேதுரு பிரதியுத்தரமாக; தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்றான் இயேசு அவனை நோக்கி: யோனாவின் குமாரனாகிய சீமோனே, நீ பாக்கியவான் மாம்சமும் இரத்தமும் இதை உனக்கு வெளிப்படுத்தவில்லை பரலோகத்திலிருக்கிற என் பிதா இதை உனக்கு வெளிப்படுத்தினார்.

மத்தேயு:20.20-23

அப்பொழுது செபெதேயுவின் குமாரருடைய தாய், தன் குமாரரோடு கூட அவரிடத்தில் வந்து அவரைப் பணிந்துகொண்டு உம்மிடத்தில் ஒரு விண்ணப்பம் பண்ணவேண்டும் என்றாள் அவர் அவளை நோக்கி உனக்கு என்ன வேண்டும் என்று கேட்டார்.அதற்கு அவள் உம்முடைய ராஜ்யத்திலே என் குமாரரகிய இவ்விரண்டுபேரில் ஒருவன் உமது வலது பாரிசத்திலும் ஒருவன் உமது இடதுபாரிசத்திலும் உட்கார்ந்திருக்கும்படி அருள் செய்யவேண்டும் என்றாள்.இயேசு பிரதியுத்தரமாக நீங்கள் கேட்டுக்கொள்ளுகிறது இன்னது என்று உங்களுக்குத் தெரியவில்லை. நான் குடிக்கும் பாத்திரத்தில் நீங்கள் குடிக்கவும் நான் பெறும் ஸ்நானத்தை நிங்கள் பெறவும் உங்களால் கூடுமா? என்றார் அதற்கு அவர்கள் கூடும்.













என்றார்கள். அவர் அவர்களை நோக்கி என் பாத்திரத்தில் நீங்கள் குடிப்பீர்கள்.நான் பெறும் ஸ்நானத்தையும் நீங்கள் பெறுவீர்கள்.ஆனாலும் என் வலது பாரிசத்திலும் என் இடது பாரிசத்திலும் உட்கார்ந்திருக்கும் படி என் பிதாவினால் எவர்களுக்கு ஆயத்தம்பண்ணப்பட்டிருக்கிறதோ அவர்களுக்கேயல்லாமல் மற்றொருவருக்கும் அதை அருளுவது என் காரியமல்ல என்றார்.
















மத்தேயு:16.21-23

அது முதல் இயேசு தாம் எருசலேமுக்குப்போய் மூப்பராலும் பிரதான ஆசாரியராலும் வேதபாரகராலும் பலபாடுகள் பட்டு கொலையுண்டு மூன்றாம் நாளில் எழுந்திருக்கவேண்டும் என்பதைத் தம்முடைய சீஷர்களுக்குச் சொல்லத் தொடங்கினார் அப்பொழுது பேதுரு, அவரைத் தனியே அழைத்துக்கொண்டு போய் ஆண்டவரே இது உமக்கு நேரிடக் கூடாது இது உமக்குச் சம்பவிப்பதில்லை என்று அவரைக் கடிந்து கொள்ளத் தொடங்கினான் அவரோ திரும்பி பேதுருவைப் பார்த்து எனக்குப் பின்னாகப்போ சாத்தானே நீ எனக்கு இடறலாயிருக்கிறாய். தேவனுக்கு ஏற்றவைகளைச் சிந்தியாமல் மனுஷருக்கு ஏற்றவைகளைச் சிந்திக்கிறாய் என்றார்

மத்தேயு:4.1-11

அப்பொழுது இயேசு பிசாசினால் சோதிக்கப்படுவதற்கு ஆவியானவராலே வனாந்தரத்திற்குக் கொண்டு போகப்பட்டார் அவர் இரவும் பகலும் நாற்பதுநாள் உபவாசமாயிருந்தபின்பு அவருக்குப் பசியுண்டாயிற்று.அப்பொழுது சோதனைக்காரன் அவரிடத்தில் வந்து நீர் தேவனுடைய குமாரனேயானால் இந்தக் கல்லுகள் அப்பங்களாகும்படி சொல்லும் என்றான் அவர் பிரதியுத்தமாக மனுஷன் அப்பத்தினாலே மாத்திரமல்ல, தேவனுடைய வாயிலிருந்து புறப்படுகிற ஒவ்வொரு வார்த்தையினாலும் பிழைப்பான் என்று எழுதியிருக்கிறதே என்றார்; அப்பொழுது பிசாசு அவரைப் பரிசுத்த நகரத்திற்குக் கொண்டுபோய் தேவாலயத்து உப்பரிகையின்மேல் அவரை நிறுத்தி நீர் தேவனுடைய குமாரனேயானால் தாழக்குதியும்,

"பசியாயிருக்கிறீர், நீர் தேவகுமாரனானால் இக் கல்லுகளை அப்பங்களாகும்படி சொல்லும்" என்றான். நானே, பாடுகளே இல்லாத மேசியாவாக மாற மறுத்து: மனிதன் அப்பத்தினால் மட்டுமின்றி தேவனுடைய வார்த்தைகளினாலே பிழைப்பான்: என்று கூறினேன்.

மக்களுடைய உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டு மேசியாவாக மாறும் அவனது தவறான ஆலோசனையை முறியடித்தேன்.

இன்னொரு சமயம் தேவாலயத்தின் உப்பரிக்கையில் நிறுத்தி நீர் இங்கிருந்து குதியும் உமக்கு தீங்கு நேரிடாது, நீர் தேவகுமாரன் என நிரூபித்தால் ஜனங்கள் உம்மைப் புகழுவார்கள் என்றான்.



ஏனெனில் தம்முடைய தூதர்களுக்கு உம்மைக் குறித்துக் கட்ளையிடுவார். உமது பாதம் கல்லில் இடறாதபடிக்கு அவர்கள் உம்மைக் கையில் எந்திக்கொண்டு போவார்கள் என்பதாய் எழுதியிருக்கிறது என்று சொன்னான். அதற்கு இயேசு உன் தேவனாகிய கர்த்தரைப் பரீட்சை பாராதிருப்பாயாக என்றும் எழுதியிருக்கிறதே என்றார் மறுபடியும் பிசாசு அவரை மிகவும் உயர்ந்த மலையின்மேல் கொண்டுபோய் உலகத்தின் சகல ராஜ்யங்கயையும் அவைகளின் மகிமையையும் அவருக்குக் காண்பித்து நீர் சாஷ்டாங்கமாய் விழுந்து என்னைப்

மறுமுறை நான் மலையுச்சியில் நின்றபோது: "நீர் என்னை விழுந்து வணங்கினால் இவ்வுலகில் எல்லா மகிமைகளையும் ராஜ்யங்களையும் உமக்குத் தருவேன்"; என்ற அவனை மேற்கொண்டேன்.

உன் தேவனாகிய கர்த்தர் ஒருவரை மட்டுமே பணிந்து கொண்டு அவருக்கே ஆராதனை செய்வாயாக என்று எழுதப்பட்டுள்ளதே.

சிநேதிகரே! இது போன்ற சோதனைகளில் விழாதிருங்கள்; என் ஜனங்களுக்காக என் ஜீவனையும் கொடுப்பேன் என்று ஏசாயா தீர்க்கதரிசியால் அறிவிக்கப்பட்ட தேவ ஊழியன் நான்.

சோர்வுண்டாகப் பேசுகிறாரே இயேசுவுடன் என் காலம் வீணாகிறது நான் முன்பே உணர்ந்திருக்க வேண்டும்.

எனக்கு குழப்பமாயுள்ளது எதுவுமே புரியவில்லை

என் சிநேகிதரே இம்மலை அடிவாரத்தில் நாம் முகாமிடுவோம்

பேதுரு, யாக்கோபு, யோவான், இந்த இரவை இம்மலையிலேயே நாம் கழிப்போம்.

பணிந்துகொண்டால் இவைகளையெல்லாம் உமக்குத் தருவேன் என்று சொன்னான் அப்பொழுது இயேசு அப்பாலே போ, சாத்தானே உன் தேவனாகிய கர்த்தரைப் பணிந்துகொண்டு அவர் ஒருவருக்கே ஆராதனை செய்வாயாக என்றும் எழுதியிருக்கிறதே என்றார். அப்பொழுது பிசாசானவன் அவரை விட்டு விலகிப் போனான். உடனே தேவதூதர்கள் வந்து அவருக்குப் பணிவிடை செய்தார்கள்.






நடு இரவில் ஒரு பேரொளியால் விழித்தெழுந்த சீஷர்கள் மூவரும், இயேசுவுடன் மோசேயும், எலியாவும் அமர்ந்து பேசிக் கொண்டிருப்பதைக் கண்டனர்.



அக்காட்சி முடிவடைந்ததும் முன்பு போல இயேசுவை மட்டுமே கண்டனர்



விடிந்ததும் நான்கு பேரும் மலையின் கிழே இறங்கி வந்தனர்

மத்தேயு:17.1-8

ஆறுநாளைக்கு பின்பு இயேசு பேதுருவையும் யாக்கோபையும் அவனுடைய சகோதரனாகிய யோவானையும் கூட்டிக்கொண்டு தனித்திருக்கும்படி உயர்ந்த மலையின்மேல் போய் அவர்களுக்கு முன்பாக மறுரூபமானார்; அவர் முகம் சூரியனைப்போலப் பிரகாசித்தது. அவர் வஸ்திரம் வெளிச்சத்தைபோல வெண்மையாயிற்று; அப்பொழுது மோசேயும் எலியாவும் அவரோடே பேசுபவர்களாக அவர்களுக்குக் காணப்பட்டார்கள் அபபொழுது பேதுரு, இயேசுவை நோக்கி; ஆண்டவரே நாம் இங்கே இருப்பது நல்லது; உமக்குச் சித்தமானால் இங்கே உமக்கு ஒரு கூடாரமும் மோசேக்கு ஒரு கூடாரமும் எலியாவுக்கு ஒரு கூடாரமுமாக, மூன்று கூடாரங்களைப் போடுவோம் என்றான் அவன் பேசுகையில், இதோ ஒளியுள்ள ஒரு மேகம் அவர்கள்மேல் நிழலிட்டது. இவர் என்னுடைய நேச குமாரன் இவரில் பிரியமாயிருக்கிறேன்; இவருக்குச் செவிகொடுங்கள் என்று அந்த மேகத்திலிருந்து ஒரு சத்தம் உண்டாயிற்று; சீஷர்கள் அதைக் கேட்டு முகங்குப்புற விழுந்து, மிகவும் பயந்தார்கள் அப்பொழுது இயேசு வந்து அவர்களைத் தொட்டு, எழுந்திருங்கள், பயப்படாதேயுங்கள் என்றார் அவர்கள் தங்கள் கண்களை ஏறெடுத்துப் பார்க்கையில் இயேசுவைத்தவிர வேறொருவரையும் காணவில்லை.



கடந்த இரவில் நடந்ததை விவரிக்க வார்த்தையே இல்லை. நிச்சயமாக மோசே எலியாவை விட இயேசு உயர்ந்தவர் என்பது புரிகிறது.
யோவானே நானும் அதைக் கண்டேன் மெய்யாகவே அவர் மேசியாவாகிய கிறிஸ்து தான். இவரே ஜீவனுள்ள தேவனுடைய குமாரன்




அவர்கள் இவரது வருகைக்கு ஆயத்தப்படுத்தினவர்கள். இவரோ தேவனுடைய மகிமையாகவே இருக்கிறார்
இயேசு என் நேசகுமாரன் இவரில் நான் பிரியமாயிருக் கிறேன். இவருக்குச் செவி கொடுங்கள் என்ற சத்தமும் நான் கேட்டேன்.




பேதுருவே, ஆண்டவரே நாம் இங்கேயே இருந்தால் உமக்கும் மோசேக்கும் எலியாவுக்கும் தனித்தனி கூடாரங்களைப் போடலாம்; என்று நீ சொன்னதையும் நான் கேட்டேன்






சிநேகிதரே! நான் மரணத்திலிருந்து எழும்பும்வரை நீங்கள் கண்டதை யாரிடமும் கூற வேண்டாம்




முழுவதும் விளங்க வில்லைதான் என்றாலும் மவுனமாயிருப்போம்
தேவன் நம்மோடு இருக்கிறார் என்று நாங்கள் நம்புகிறோம்.




சிநேகிதரே, வாருங்கள் நாம் எருசலேம் போகலாம்.

பஸ்கா பண்டிகைக்கு எருசலேமில் இருக்க இயேசு முடிவு செய்தார். தன் சீஷர்களுடன் ஒலிவ மலைக்கு வந்து சேர்ந்தார்

அங்கே எருசலேமுக்குப் பயணமாகச் செல்லும் சில யாத்ரீகர்களை அவர்கள் சந்தித்தனர்.

அதோ நாசரேத்தூர் இயேசு

நமது கலிலேயாவைச் சேர்ந்த பிரபலமான தீர்க்கதரிசி

அதோ, இயேசு!




இயேசுவே எங்கள் திட்டத்தை ஒப்புக் கொள்ளுங்கள்

சரி

அந்த கிராமத்தில் சென்று கட்டப்பட்டுள்ள ஒரு கழுதையை அவிழ்த்து வாருங்கள். அதன் மேல் பவனி வருவேன்



மத்தேயு:21.1-17

அவர்கள் எருசலேமுக்குச் சமீபமாய் சேர்ந்து ஒலிவமலைக்கு அருகான பெத்பகேயுக்கு வந்தபோது, இயேசுவானவர் சீஷரில் இரண்டுபேரை நோக்கி: உங்களுக்கு எதிரே இருக்கிற கிராமத்துக்குப் போங்கள். போனவுடனே அங்கே ஒரு கழுதையையும் அதனோடே ஒரு குட்டியையும் கட்டியிருக்கக் காண்பீர்கள். அவைகளை அவிழ்த்து என்னிடத்தில் கொண்டுவாருங்கள். ஒருவன் உங்களுக்கு ஏதாகிலும் சொன்னால் இவைகள் ஆண்டவருக்கு வேண்டுமென்று சொல்லுங்கள், உடனே அவைகளை அனுப்பிவிடுவான் என்று சொல்லி, அவர்ளை அனுப்பினார்; இதோ உன் ராஜா சாந்தகுணமுள்ளவாராய் கழுதையின்மேலும்,













கழுதைக்குட்டியாகிய மறியின்மேலும் ஏறிக்கொண்டு உன்னிடத்தில் வருகிறார் என்று சீயோன் குமாரத்திக்குச் சொல்லுங்கள் என்று தீர்க்கதரிசியினால் உரைக்கப்பட்டது நிறைவேறும்படி இதெல்லாம் நடந்தது,சீஷர்கள் போய் இயேசு தங்களுக்குக் கட்டளையிட்டபடியே செய்து கழுதையையும் குட்டியையும் கொண்டு வந்து அவைகள் மேல் தங்கள் வஸ்திரங்களை போட்டு அவரை ஏற்றினார்கள்; திரளான ஜனங்கள் தங்கள் வஸ்திரங்களை வழியிலே விரித்தார்கள் வேறு சிலர் மரக்கிளைகளைத் தறித்து வழியிலே பரப்பினார்கள் முன் நடப்பாரும் பின்நடப்பாருமாகிய திரளான ஜனங்கள் தாவீதின் குமாரனுக்கு ஓசன்னா,என்று சொல்லி ஆர்ப்பரித்தார்கள் அவர் எருசலேமுக்குள் பிரவேசிக்கையில் நகரத்தார் யாவரும் ஆச்சரியப்பட்டு இவர் யார்? என்று விசாரித்தார்கள் அதற்கு ஜங்கள் இவர் கலிலேயாவிலுள்ள நாசரேத்திலிருந்து வந்த

(தொடர்ச்சி பக்கம்-57)







ஊர்வலம் தேவாலயப் பகுதிக்கு வந்ததும் பிச்சைக்காரர் மற்றும் பலவிதமான வியாதியஸ்தர்களும் அதில் இணைந்து கொண்டனர்.




சிறு பிள்ளைகளும் கூட இயேசுவைப் புகழ ஆரம்பித்தனர்







இச் சிறுபிள்ளைகள் கூறுவதைக் கேட்கிறீரா? அவர்களை அடக்கி இப்பரிசுத்த இடத்திற்குரிய மரியாதையைக் கொடும்
பரிசுத்தமான இடத்திற்கு மரியாதை!
இதோ இவர்கள் எல்லோரும் பரிசுத்தமான இடத்தில் வியாபாரம் செய்கிறார்களே, இது வெட்கமானதாக இல்லையா?










தீர்க்தரிசியாகிய இயேசு என்றார்கள். இயேசு தேவாலயத்தில் பிரவேசித்து ஆலயத்திலே விற்கிறவர்களும் கொள்ளுகிறவர்களுமாகிய யாவரையும் வெளியே துரத்தி காசுக்காரருடைய பலகைகளையும்.புறா விற்கிறவர்களின் ஆசனங்களையும் கவிழ்த்து என்னுடைய வீடு ஜெபவீடு என்னப்படும் என்று எழுதியிருக்கிறது; நீங்களோ அதைக் கள்ளர் குகையாக்கினீர்கள் என்றார். அப்பொழுது குருடரும் சப்பாணிகளும் தேவாலயத்திலே அவரிடத்திற்கு வந்தார்கள். அவர்களைச் சொஸ்தமாக்கினார்; அவர் செய்த அதிசயங்களையும் தாவீதின் குமாரனுக்கு ஓசன்னா! என்று தேவாலயத்திலே ஆர்ப்பரிக்கிற பிள்ளைகளையும் பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் கண்டு கோபமடைந்து அவனை நோக்கி: அவர்கள் சொல்லுகிறதைக் கேட்கிறீரோ என்றார்கள். அதற்கு இயேசு; ஆம் கேட்கிறேன் குழந்தைகளுடைய வாயினாலும் பாலகருடைய வாயினாலும் துதி உண்டாகும்படி செய்தீர் என்பதை நீங்கள் ஒருக்காலும் வாசிக்கவில்லையா என்றார். அவர்களை விட்டு நகரத்திலிருந்து புறப்பட்டு பெத்தானியாவுக்குப் போய் அங்கே இராத்தங்கினார்













அது ஒரு உவமை தான். தேவனுடைய புதிய ஆலயமாகிய தமது சரீரம் பற்றி இயேசு பேசினார். அவரை அழித்துக் கொன்று விட்டாலும் மூன்று நாளில் அவர் உயிர்த்தெழுவார் என்பதை அது நடந்த பின்னர் புரிந்து கொண்டனர்.

வெகு விரைவிலேயே இயேசுவின் எதிரிகளான பரிசேயர் யாவரும் பிரதான ஆசாரியனான காய்பாவின் தலைமையில் கூடிப் பேசினர்.



















யோவான்: 11.47-50

அப்பொழுது பிரதான ஆசாரியரும் பரிசேயரும் ஆலோசனைச் சங்கத்தைக் கூடிவரசெய்து நாம் என்ன செய்கிறது.இந்த மனுஷன் அநேக அற்புதங்களைச் செய்கிறானே.நாம் இவனை இப்படி விட்டுவிட்டால் எல்லாரும் இவனை விசுவாசிப்பார்கள், அப்பொழுது ரோமர் வந்து நம்முடைய ஸ்தானத்தையும் ஜனத்தையும் அழித்துப் போடுவார்களே என்றார்கள்;

அப்பொழுது அவர்களில் ஒருவனும் அந்த வருஷத்துப் பிரதான ஆசாரியனுமாகிய காய்பா என்பவன் அவர்களை நோக்கி: உங்களுக்கு ஒன்றும் தெரியாது ஜனங்களெல்லாரும் கெட்டுப்போகாதபடிக்கு ஒரே மனுஷன் ஜனங்களுக்காக மரிப்பது நமக்கு நலமாயிருக்குமென்று நீங்கள் சிந்தியாமலிக்கிறீர்கள் என்றான்.










சில நாட்களுக்குப் பின்பு, ஒரு இரவில்....
















மத்தேயு:26.3.5.14-16

அப்பொழுது பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும் காய்பா என்னப்பட்ட பிரதான ஆசாரியனுடைய அரமனையிலே கூடிவந்து இயேசுவைத் தந்திரமாய்ப் பிடித்துக் கொலைசெய்யும்படி ஆலோசனை பண்ணினார்கள். ஆகிலும் ஜனங்களுக்குள்ளே கலகமுண்டாகாதபடிக்குப் பண்டிகையிலே அப்படிச் செய்யலாகாது என்றார்கள். அப்பொழுது பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ்காரியோத்து என்பவன் பிரதான ஆசாரிடத்திற்குப் போய் நான் அவரை உங்களுக்குக் காட்டிக் கொடுக்கிறேன் நீங்கள் எனக்கு என்ன கொடுக்கிறீர்கள் என்றான்; அவர்கள் அவனுக்கு முப்பது வெள்ளிக் காசைக் கொடுக்க உடன்பட்டார்கள்; அதுமுதல் அவன் அவரைக் காட்டிக் கொடுப்பதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தான்.
















சில மணி நேரங்களுக்குப் பின்பு....




















அன்று மாலையில்







லூக்கா:22.7-12

பஸ்காவைப் பலியிட வேண்டிய புளிப்பில்லாத அப்பப்பண்டிகை நாள் வந்தது; அப்பொழுது அவர் பேதுருவையும் யோவானையும் அழைத்து நாம் பஸ்காவைப் புசிக்கும்படிக்கு நீங்கள் போய் அதை நமக்கு ஆயத்தம்பண்ணுங்கள், என்றார் அதற்கு அவர்கள்; நாங்கள் அதை எங்கே ஆயத்தம் பண்ணும்படி சித்தமாயிருக்கிறீர் என்று கேட்டார்கள். அதற்கு அவர்: நீங்கள் நகரத்தில் பிரவேசிக்கும்போது தண்ணீர்குடம் சுமந்துவருகிற ஒரு மனுஷன் உங்களுக்கு எதிர்ப்படுவான்; நீங்கள் அவனுக்குப் பின்சென்று,அவன் போகும் வீட்டிற்குள் நீங்களும் போய், அந்த வீட்டெஜமானை நோக்கி; நான் என் சீஷரோடுகூடப் பஸ்காவைப் புசிக்கிறதற்குத் தகுதியான இடம் எங்கே என்று போதகர் உம்மிடத்தில் கேட்கச் சொன்னார் என்று சொல்லுங்கள் அவன் கம்பளமுதலானவைகள் விரித்திருக்கிற மேல்வீட்டிலுள்ள ஒரு பெரிய அறையை உங்களுக்குக் காண்பிப்பான் அங்கே ஆயத்தம் பண்ணுங்கள் என்று சொல்லி அனுப்பினார்

அவர்கள் பந்தியில்
அமர்ந்த போது சிறு
பிரச்சனை ஏற்பட்டது.

எனக்குத்தான்
இந்த இடம்.
இயேசுவுக்கு அருகில்
அமர எனக்கே
உரிமையுண்டு

முடியாது. நான்தான் இங்கிருப்பேன்
நாம் அனைவரும் ஒரே
குழுவைச்சேர்ந்தவர்கள்தானே

அது சரி, யாருக்கும்
முக்கியத்துவமில்லை
எல்லோரும் சமம்தான்.

சிநேகிதரே,
உங்கள்
இடங்களில்
அமருமுன் சற்று
பொறுங்கள்

புற ஜாதிகளின் ராஜாக்கள்
தங்கள் ஜனங்களை கர்வமாகவும்
பட்டயத்தோடும் ஆளுகை
செய்கின்றனர். நீங்கள்
அப்படிப்பட்டவர்கள் அல்ல

நீங்களோ
ஒருவருக்
கொருவர்
ஊழியம்
செய்ய
வேண்டும்

அதன் பின்னர்

அவர் என்ன
செய்கிறார்?

ஒன்றும் புரியவில்லையே
எதையோ சுத்தம் செய்ய
ஆயத்தப்படுகிறார்
போலுள்ளதே
















இயேசு அதை முடித்த பின்பு




யூதாசைப் பற்றிய நினைவில் அப்படிச் சொன்னார்




யோவான் 13 : 2-11, 21-30

சீமோனின் குமாரனாகிய யூதாஸ்காரியோத்து அவரைக் காட்டிக் கொடுக்கும்படி பிசாசானவன் அவன் இருதயத்தைத் தூண்டின பின்பு, அவர்கள் போஜனம் பண்ணிக் கொண்டிருக்கையில்; தம்முடைய கையில் பிதா எல்லாவற்றையும் ஒப்புக்கொடுத்தாரென்பதையும் தாம் தேவனிடத்திலிருந்து வந்ததையும் தேவனிடத்திற்குப் போகிறதையும் இயேசு அறிந்து; போஜனத்தை விட்டெழுந்து வஸ்திரங்களைக் கழற்றிவைத்து ஒரு சீலையை எடுத்து அரையிலே கட்டிக்கொண்டு, பின்பு பாத்திரத்தில் தண்ணீர் வார்த்து சீஷருடைய கால்களைக் கழுவவும், தாம் கட்டிகொண்டிருந்த சீலையினால் துடைக்கவும் தொடங்கினார். அவர் சீமோன் பேதுருவினிடத்தில் வந்தபோது அவன் அவரை நோக்கி: ஆண்டவரே நீர் என் கால்களைக் கழுவலாமா என்றான் இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: நான் செய்கிறது இன்னதென்று இப்பொழுது நீ அறியாய் இனிமேல் நீ அறிவாய் பேதுரு அவரை நோக்கி: நீர் ஒருக்காலும் என் கால்களைக் கழுவப்படாது என்றான் இயேசு அவனுக்குப் பிரதியுத்தரமாக: நான் உன்னைக் கழுவாவிட்டால் என்னிடத்தில் உனக்குப் பங்கில்லை என்றார். அதற்குச் சீமோன் பேதுரு: ஆண்டவரே, என் கால்களைமாத்திரமல்ல என் கைகளையும்

ஒடுக்கப்பட்டுபின் பெரிய விடுதலை
அடைந்ததை நினைவுகூரும்படி
முதலில் கசப்பான ஒரு பதார்த்தத்துடன்
தங்கள் பஸ்கா உணவைச்
சாப்பிடத் துவங்கினர்.



சிநேகிதரே உங்களில் ஒருவன் என்னைக் காட்டிக் கொடுப்பான் என்ற துயரமான செய்தியைக் கூறுகிறேன்




நானா?

நீர் என்னைப் பற்றி கூறவில்லையே?




என் தலையையும் கூடக் கழுவ வேண்டும் என்றான்: இயேசுஅவனை நோக்கி: முழுகினவன் தன் கால்களைமாத்திரம் கழுவவேண்டியதா யிருக்கும் மற்றப்படி அவன் முழுவதும் சுத்தமாயிருக்கிறான்: நீங்களும் சுத்தமாயிருக்கிறீர்கள் ஆகிலு எல்லாரும் அல்ல என்றார் தம்மைக் காட்டிக்கொடிக்கிறவனை அவர் அறிந்திருந்தபடியினால் நீங்களெல்லாரும் சுத்தமுள்ளவர்கள் அல்ல என்றார் இயேசு இவைகளைச் சொன்ன பின்பு ஆவியிலே கலங்கி: உங்களில் ஒருவன் என்னைக் காட்டிக் கொடுப்பான் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேனென்று சாட்சியாகவே சொன்னார். அப்பொழுது யாரைக் குறித்துப் பேசுகிறாரோ என்று சீஷர்கள்

















அப்பத்துண்டைப்
பெற்றுக் கொண்டபின்பு
யூதாஸ்
வெளியே எழும்பிச்
சென்றான்



அது இரவு
வேளை







ஐயப்பட்டு ஒருவரையொருவர் நோக்கிப் பார்த்தார்கள். அந்தச் சமயத்தில் அவருடைய சீஷரில் இயேசுவுக்கு அன்பானவனாயிருந்த ஒருவன் இயேசுவின் மார்பிலே சாய்ந்து கொண்டிருந்தான். யாரைக் குறித்துச் சொல்லுகிறாரென்று விசாரிக்கும்படி சீமோன் பேதுரு அவனுக்குச் சைகைகாட்டினான். அப்பொழுது அவன் இயேசுவின் மார்பிலே சாய்ந்துகொண்டு ஆண்டவரே அவன் யார் என்றான். இயேசு பிரதியுத்தரமாக: நான் இந்தத் துணிக்கையைத் தோய்த்து எவனுக்குக் கொடுப்பேனோ அவன்தான் என்று சொல்லி துணிக்கையைத் தோய்த்து சீமோன் குமாரனாகிய யூதாஸ்காரியோத்துக்குக் கொடுத்தார் அந்தத் துணிக்கையை அவன் வாங்கின பின்பு சாத்தான் அவனுக்குள் புகுந்தான். அப்பொழுது இயேசு அவனை நோக்கிநீ செய்கிறதைச் சீக்கிரமாய்ச் செய் என்றார் அவர் இப்படி அவனுடனே சொன்னதின் கருத்தைப் பந்தியிருந்தவர்களில் ஒருவனும் அறியவில்லை. யூதாஸ் பணப்பையை வைத்துக் கொண்டிருந்தபடியினால் அவன் போய் பண்டிகைக்குத் தேவையானவைகளைக் கொள்ளும்படிக்காவது தரித்திரருக்கு ஏதாகிலும் கொடுக்கும்படிக்காவது இயேசு அவனுடனே சொல்லியிருப்பார் என்று சிலர் நினைத்தார்கள் அவன் அந்தத் துணிக்கையை வாங்கினவுடன் புறப்பட்டுப் போனான். அப்பொழுது இராக்காலமாயிருந்தது.

யூதாஸ் போன் பின்பு இயேசு
ஆசீர்வாதம்
கூறி சாப்பிடத் துவங்கினார்.




அப்பத்தைப் பிட்டு
அவர்களிடம் வழங்கினார்



அத்துடன்....






லூக்கா:22:19-20
பின்பு அவர் அப்பத்தை எடுத்து ஸ்தோத்திரம் பண்ணி அதைப் பிட்டு, அவர்களுக்குக் கொடுத்து இது உங்களுக்காகக் கொடுக்கப்படுகிறது, என்னுடைய சரீரமாயிருக்கிறது, என்னை நினைவுகூரும்படி இதைச் செய்யுங்கள் என்றார். போஜனம் பண்ணின பின்பு அவர் அந்தப்படியே பாத்திரத்தையும் எடுத்து இந்தப்பாத்திரம் உங்களுக்காகச் சிந்தப்படுகிற என்னுடைய இரத்தத்தினாலாகிய புதிய உடன்படிக்கையாயிருக்கிறது என்றார்.

அப்பம் புசித்தபின்பு பாத்திரத்தை எடுத்து ஸ்தோத்திரம் கூறினார்.




மேலும்..







இயேசுவும் அவரது சீஷர்களும் உண்டு முடித்தபின்பு பஸ்காவின் ஸ்தோத்திரப் பாடலைப் பாடினர்.

அதன் பின் எருசலேமை விட்டு வெளியேறினர்.





கிதரோன் பள்ளத்தாக்கு வழியே சென்றனர்



கடைசியாக ஒலிவ மலையின் மேல் ஏறிச் சென்றனர்.










கெத்செமனே தோட்டத்திற்கு இயேசு வந்தார்.




மாற்கு : 14.26-72

அவர்கள் ஸ்தோத்திரப்பாட்டைப் பாடின பின்பு ஒலிவமலைக்குப் புறப்பட்டுப்போனார்கள். அப்பொழுது இயேசு அவர்களை நோக்கி: மேய்ப்பனை வெட்டுவேன் ஆடுகள் சிதறடிக்கப்படும் என்று எழுதியிருக்கிறபடி இந்த இராத்திரியிலே நீங்களெல்லாரும் என்னிமித்தம் இடறலடைவீர்கள் ஆகிலும் நான் உயிர்த்தெழுந்த பின்பு உங்களுக்கு முன்னே கலிலேயாவுக்குப் போவேன் என்றார். அதற்குப் பேதுரு உமதுநிமித்தம் எல்லாரும் இடறலடைந்தாலும் நான் இடறலடையேன் என்றான். இயேசு அவனை நோக்கி இன்றைக்கு இந்த இராத்திரியிலே சேவல் இரண்டுதரம் கூவுகிறதற்கு முன்னே நீ மூன்றுதரம் என்னை மறுதலிப்பாய் என்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார் அதற்கு அவன் நான் உம்மோடே மரிக்கவேண்டியதாயிருந்தாலும் உம்மை மறுதலிக்கமாட்டேன் என்று உறுதியாய்ச் சொன்னான் எல்லாரும் அப்படியே சொன்னார்கள். பின்பு கெத்செமனே என்னப்பட்ட இடத்திற்கு வந்தார்கள் அப்பொழுது அவர்

இயேசு அம்மூன்று சீஷரையும் தன்னுடன் அழைத்துச்சென்றார்











இயேசுவின் சீஷர்கள் நன்றாகத் தூங்கினார்கள்.







தம்முடைய சீஷர்களை நோக்கி: நான் ஜெபம்பண்ணுமளவும் இங்கே உட்கார்ந்திருங்கள் என்று சொல்லி பேதுருவையும் யாக்கோபையும் தம்மோடே கூட்டிக்கொண்டுபோய் திகிலடையவும் மிகவும் வியாகுலப்படவும் தொடங்கினார். அப்பொழுது அவர்: என் ஆத்துமா மரணத்துக்கேதுவான துக்கங்கொண்டிருக்கிறது நீங்கள் இங்கே தங்கி விழித்திருங்கள் என்று சொல்லி சற்று அப்புறம்போய் தரையில் விழுந்து அந்த வேளை தம்மைவிட்டு நீங்கிப் போகக் கூடுமானால் அது நீங்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டு அப்பா பிதாவே, எல்லாம் உம்மாலே கூடும். இந்தப்பாத்திரத்தை என்னிடத்திலிருந்து எடுத்துப்போடும் ஆகிலும் என்சித்தத்தின்படியல்ல உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது என்றார் பின்பு அவர் வந்து அவர்கள் நித்திரை பண்ணுகிறதைக்கண்டு பேதுருவை நோக்கி சீமோனே, நித்திரைபண்ணுகிறாயா? ஒரு மணிநேரம் நீ விழித்திருக்கக்கூடாதா? நீங்கள் சோதனைக்குட்படாதபடிக்கு விழித்திருந்து ஜெபம்பண்ணுங்கள் ஆவி உற்சாகமுள்ளதுதான் மாம்சமோ பலவீனமுள்ளது என்றார். அவர் திரும்ப வந்தபோது







அதே சமயம் தோட்டத்தின்
நுழைவாயிலில்....














அவர்கள் மறுபடியும் நித்திரைபண்ணுகிறதைக் கண்டார்; அவர்களுடைய கண்கள் மிகுந்த நித்திரைமயக்கம் அடைந்திருந்தபடியால் தாங்கள் மறுமொழியாக அவருக்குச் சொல்லுவது இன்னதென்று அறியாதிருந்தார்கள். அவர் மூன்றாந்தரம் வந்து இனி நித்திரைபண்ணி இளைப்பாறுங்கள். போதும் வேளை வந்தது இதோ மனுஷகுமாரன் பாவிகளுடைய கைகயில் ஒப்புக்கொடுக்கப்படுகிறார் என்னைக் காட்டிக்கொடுக்கிறவன் இதோ வந்துவிட்டான்; எழுந்திருங்கள்! போவோம் என்றார்; உடனே அவர் இப்படிப் பேசுகையில் பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் வந்தான். அவனோடேகூடப் பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும் அனுப்பின திரளான ஜனங்கள் பட்டயங்களையும் தடிகளையும் பிடித்துக்கொண்டு வந்தார்கள்; அவரைக் காட்டிக்கொக்கிறவன் நான் எவனை முத்தஞ்செய்வேனோ அவன்தான் அவனைப் பிடித்துப் பத்திரமாய்க் கொண்டு போங்கள் என்று அவர்களுக்குக் குறிப்புச் சொல்லியிருந்தான்; அவன் வந்தவுடனே அவரண்டையில்

முதல் அதிர்ச்சிக்குப்பிறகு இயேசுவின் சீஷர்கள் விழிப்படைந்தனர்.















தன்னைக் கைது செய்ய இயேசு அனுமதித்தார். பின் சீஷர்கள் அவரை விட்டு சிதறிப் போனார்கள்.



சேர்ந்து: ரபீ என்று சொல்லி அவரை முத்தஞ்செய்தான் அப்பொழுது அவர்கள் அவர்மேல் கைபோட்டு அவரைப் பிடித்தார்கள் அப்பொழுது கூடநின்றவர்களில் ஒருவன் கத்தியை உருவி பிரதான ஆசாரியனுடைய வேலைகாரனைக் காதற வெட்டினான். இயேசு அவர்களை நோக்கி கள்ளனைப் பிடிக்கப் புறப்படுகிறதுபோல நீங்கள் பட்டயங்களையும் தடிகளையும் எடுத்துக்கொண்டு என்னைப் பிடிக்க வந்தீர்கள் நான் தினந்தோறும் உங்கள் நடுவிலே தேவாலயத்தில் உபதேசம் பண்ணிக்கொண்டிருந்தேன்; அப்பொழுது நீங்கள் என்னைப் பிடிக்கவில்லையே ஆனாலும் வேதவாக்கியங்கள் நிறைவேற வேண்டியதாயிருக்கிறது என்றார். அப்பொழுது

எல்லாரும் அவரை விட்டு ஓடிபோனார்கள்: ஒரு வாலிபன் ஒரு துப்பட்டியை மாத்திரம் தன்மேல் போர்த்துக் கொண்டுஅவர் பின்னே போனான்.... இயேசுவை பிரதான ஆசாரியரிடத்தில்

ஒலிவ மலையிலிருந்து
எருசலேமுக்கு அவரைக் கொண்டு
சென்றனர்.












கொண்டுபோனார்கள். அங்கே ஆசாரியர் மூப்பர் வேதபாரகர் எல்லாரும் கூடிவந்திருந்தார்கள் பேதுரு தூரத்தில் அவருக்குப் பின்சென்று பிரதான ஆசாரியனுடைய அரண்மனைக்குள் வந்து சேவகரோடேகூட உட்கார்ந்து நெருப்பண்டையிலே குளிர் காய்ந்துக்கொண்டிருந்தான். அப்பொழுது பிரதான ஆசாரியரும் ஆலோசனைச் சங்கத்தாரனைவரும் இயேசுவைக் கொலைசெய்யும்படி அவருக்கு விரோதமாகச்சாட்சி
















இதற்கிடையில் பிரதான ஆசாரியனின் வீட்டில்






நாசரேத்தூர் இயேசுவை விசாரணை செய்வோம். இவனால் தேசத்தின் நன்மையே கெட்டு விடும்.

இவன் செயல்கள் சமூக ஒழுங்கை கெடுப்பவை. இவன் பேசுபவை புரட்சியானது. நமது மதம் மற்றும் ஆலயத்துக்கு எதிரானவையாக உள்ளன.
















தேடினார்கள் அகப்படவில்லை அநேகர்அவருக்கு விரோதமாகப் பொய்ச்சாட்சி சொல்லியும் அந்தச் சாட்சிகள் ஒவ்வவில்லை அப்பொழுது சிலர் எழுந்து கை வேலையாகிய இந்தத் தேவாலயத்தை நான் இடித்துப்போட்டு கைவேலையல்லாத வேறொன்றை மூன்று நாளைக்குள்ளே கட்டுவேன் என்று இவன் சொன்னதை நாங்கள் கேட்டோம் என்று அவருக்கு விரோதமாய்ப் பொய்ச் சாட்சி சொன்னார்கள்; அப்படிச் சொல்லியும் அவர்கள் சாட்சி ஒவ்வாமற்போயிற்று; அப்பொழு பிரதான ஆசாரியன் எழுந்து நடுவே நின்று இயேசுவை நோக்கி இவர்கள் உனக்கு விரோதமாய்ச் சொல்லுகிறதைக் குறித்து நீ ஒன்றும் சொல்லுகிறதில்லையா என்று கேட்டான் அவரோ ஒரு உத்தரவும் சொல்லாமல் பேசாதிருந்தார். மறுபடியும் பிரதான ஆசாரியன் அவரை நோக்கி நீ ஸ்தோத்திக்கப்பட்ட தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்துதானா? என்று கேட்டான் அதற்கு இயேசு, நான் அவர்தான், மனுஷகுமாரன் சர்வவல்லவரின்
















வலது பாரிசத்தில் வீற்றிருப்பதையும் வானத்தின் மேகங்கள்மேல் வருவதையும் நீங்கள் காண்பீர்கள் என்றார் பிரதான ஆசாரியன் இதைக் கேட்டவுடனே தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு இனிச்சாட்சிகள் நமக்கு வேண்டியதென்ன? தேவதூஷணத்தைக் கேட்டீர்களே. உங்களுக்கு என்னமாய்த் தோன்றுகிறது என்றான் அதற்கு அவர்களெல்லாரும் இவன் மரணத்துக்குப் பாத்திரனாயிருக்கிறான் என்று தீர்மானம் பண்ணினார்கள். அப்பொழுது சிலர் அவர்மேல் துப்பவும் முகத்தை மூடவும் அவரைக் குட்டவும் ஞானதிருஷ்டியினாலே பார்த்துச் சொல் என்று சொல்லவும் தொடங்கினார்கள் வேலைக்காரரும் அவரைக் கன்னத்தில் அறைந்தார்கள் அத்தருணத்திலே பேதுரு கீழே அரமனை முற்றத்திலிருக்கையில் பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரிகளில் ஒருத்தி வந்து குளிர்காய்ந்து




இதற்கிடையே மண்டபத்தில்
குளிர்காயும் நெருப்பினருகே...













கொண்டிருக்கிற பேதுருவைக் கண்டு அவனை உற்றுப் பார்த்து நீயும் நசரேனாகிய இயேசுவோடே இருந்தாய் என்றாள் அதற்கு அவன் நான் அறியேன், நீ சொல்லுகிறது எனக்குத் தெரியாது என்று மறுதலித்து வெளியே வாசல் மண்டபத்துக்குப் போனான்; அப்பொழுது சேவல் கூவிற்று. வேலைக்காரி அவனை மறுபடியும் கண்டு இவன் அவர்களின் ஒருவன் என்று அருகே நின்றவர்களுக்குச் சொன்னாள் அவன் மறுபடியும் மறுதலித்தான். சற்றுநேரத்துக்குப்பின்பு மறுபடியும் அருகே நின்றவர்கள் பேதுருவைப் பார்த்து மெய்யாகவே நீ அவர்களின் ஒருவன் நீ கலிலேயன் உன் பேச்சு அதற்கு ஒத்திருக்கிறது என்றார்கள்; அதற்கு அவன் நீங்கள் சொல்லுகிற மனுஷனை அறியேன் என்று சொல்லி சபிக்கவும் சத்தியம்பண்ணவும் தொடங்கினான். உடனே சேவல் இரண்டாந்தரம் கூவிற்று. சேவல் இரண்டாந்தரம் கூவுகிறதற்கு முன்னே நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று இயேசு தனக்குச் சொன்ன வார்த்தையைப் பேதுரு நினைவுகூர்ந்து மிகவும் அழுதான்.

ஆலோசனை சங்கத்தினர் இயேசுவைக் கொல்ல முடிவு செய்ததை அறிந்த யூதாஸ்



மனவேதனையுடன் ஆலோசனைக் சங்கத்தினரிடம் சென்று தான் பெற்ற முப்பது வெள்ளிக்காசுகளை திருப்பித்தர முயன்றான்.










துயரத்துடன் சென்று, யூதாஸ் தற்கொலை செய்துகொண்டான்



மறுநாள் காலையில் இயேசு பிலாத்துவிடம் கொண்டு செல்லப்பட்டார்



மத்தேயு 27: 3-5

அப்பொழுது அவரைக் காட்டிக் கொடுத்த யூதாஸ் அவர் மரணாக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்பட்டதைக் கண்டு மனஸ்தாபப்பட்டு அந்த முப்பது வெள்ளிக்காசைப் பிரதான ஆசாரியரிடத்திற்கும் மூப்பரிடத்திற்கும் திரும்பக் கொண்டு வந்து குற்றமில்லாத இரத்தத்தை நான் காட்டிக் கொடுத்ததினால் பாவஞ்செய்தேன் என்றான் அதற்கு அவர்கள் எங்களுக்கென்ன அது உன்பாடு என்றார்கள். அப்பொழுது அவன் அந்த வெள்ளிக்காசைத் தேவாலயத்திலே எறிந்துவிட்டு புறப்படுப்போய் நான்று கொண்டு செத்தான்













யோவான்:18:28-19:1-3;9-10

அவர்கள் காய்பாவினிடத்திலிருந்து இயேசுவைத் தேசாதிபதியின் அரண்மனைக்கு கொண்டு போனார்கள் அப்பொழுது விடியற்காலமாயிருந்தது. தீட்டுப்படாமல் பஸ்காவைப் புசிக்கத்தக்கதாக அவர்கள் தேசாதிபதியின் அரண்மனைக்குள் பிரவேசியாதிருந்தார்கள் ஆதலால் பிலாத்து அவர்களிடத்தில் வெளியே வந்து இந்த மனுஷன் மேல் என்ன குற்றம் சாட்டுகிறீர்கள் என்றான். அவர்கள் அவனுக்கு பிரதியுத்தரமாக இவன் குற்றவாளியாயிராவிட்டால் இவனை உம்மிடம் ஒப்புக்கொடுக்க மாட்டோம் என்றார்கள் அப்பொழுது பிலாத்து அவர்களை நோக்கி; இவனை நீங்களே கொண்டுபோய் உங்கள். நியாயப்பிரமாணத்தின்படி நியாயந்தீருங்கள். என்றால் அதற்கு யூதர்கள்; ஒருவனையும் மரண ஆக்கினை செய்ய எங்களுக்கு அதிகாரமில்லை என்றார்கள். தாம் இன்னவிதமான மரணமாய் மரிக்கப்போகிறாரென்பதைக் குறித்து இயேசு குறிப்பாய்ச் சொல்லியிருந்த வார்த்தை நிறைவேறத்தக்கதாக இப்படிச் சொன்னார்கள் அப்பொழுது பிலாத்து மறுபடியும் அரமனைக்குள் பிரவேசித்து இயேசுவை அழைத்து. நீ யூதருடைய ராஜாவா என்று கேட்டான் இயேசு அவனுக்கு பிரதியுத்தரமாக: நீராய் இப்படிச் சொல்கிறீரோ அல்லது மற்றவர்கள் என்னைக்குறித்து இப்படி உமக்குச் சொன்னார்களோ என்றார் பிலாத்து பிரதியுத்தரமாக:


அப்படியானால் நீ இராஜாவா?
ஆம், நான் இராஜாதான்
சத்தியத்தைப் பற்றி சாட்சியிடவே நான் பிறந்தேன். சத்தியவான் எவனும் என் சத்தத்தைக் கேட்கிறான்.
சத்தியமா? அது என்ன?


நிச்சயமாகவே இவன் ஒரு கலகக்காரனோ குழப்பமுண்டாக்கும் தத்துவவாதியோ அல்ல, ஆனால் வெறிப்பிடித்த பரிசேயர் ஏதோ ஒரு இரகசிய காரணத்தினால்தான் அவனை எதிர்க்கிறார்கள் நான் கவனமாகச் செயல்பட வேண்டும்.


காவலறைக்குக் கொண்டு செல்லுங்கள்


தன்னை இராஜா என்பவன் இதோ
இராஜாவா


இராஜாவே வாரும் இதோ வரவேற்பு!




நான் யூதனா? உன் ஜனங்களும் பிரதான ஆசாரியரும் உன்னை என்னிடத்தில் ஒப்புக்கொடுத்தார்கள் நீ என்ன செய்தாய் என்றான். இயேசு பிரதியுத்தரமாக: என் ராஜ்யம்

இவ்வுலகத்துக்குரியதல்ல என் ராஜ்யம் இவ்வுலகத்துக்குரியதானால் நான் யூதரிடத்தில் ஒப்புக்கொடுக்கப்படாதபடிக்கு என் ஊழியக்காரர்கள் போராடியிருப்பார்களே இப்படியிருக்க என் ராஜ்யம் இவ்விடத்திற்குரியதல்ல என்றார் அப்பொழுது பிலாத்து அவரை நோக்கி: அப்படியானால் நீ இராஜாவோ என்றான் இயேசு பிரதியுத்தரமாக: நீர் சொல்லுகிறபடி நான் இராஜாதான் சத்தியத்தைக் குறித்துச் சாட்சி கொடுக்க நான் பிறந்தேன் இதற்காகவே இந்த உலகில் வந்தேன், சத்தியவான் எவனும் என்சத்தம் கேட்கிறான் என்றார் அதற்கு பிலாத்து சத்தியமாவது என்ன என்றான் மறுபடியும் அவன் யூதர்களிடத்தில் வெளியே வந்து நான் அவனிடத்தில் ஒரு குற்றமும் காணேன் பஸ்காபண்டிகையில் நான் உங்களுக்கு ஒருவனை விடுதலைபண்ணுகிற வழக்கமுண்டே, ஆகையால் யூதருடைய ராஜாவை நான் உங்களுக்காக விடுதலை பண்ண உங்களுக்கு மனதுண்டா என்றான் அப்பொழுது அவர்களெல்லாரும் இவனையல்ல பரபாசை விடுதலைபண்ண உங்களுக்கு மனதுண்டா என்றான் அப்பொழுது அவர்களெல்லாரும் இவனையல்ல பரபாசை விடுதலைபண்ண வேண்டும் என்று மறுபடியும் சத்தமிட்டார்கள்; அந்தப் பரபாசென்பவன் கள்ளனாயிருந்தான் அப்பொழுது பிலாத்து இயேசுவைப் பிடித்து வாரினால் அடிப்பித்தான். போர்ச்சேவகர் முள்ளுகளினால் ஒரு முடியைப் பின்னி அவர் சிரசின் மேல்

தொடர்ச்சி பக்கம் - 82


நாளை யூதருடைய பரிசுத்த பண்டிகையான பஸ்காவின் ஓய்வுநாள்


உம்மைக்காண கூட்டம் நிரம்பி வழிகிறது


தங்களுக்கு விருப்பமான கைதியை விடுவிக்க எதிர்ப்பார்க்கிறார்கள்


என் யோசனை இதுதான் இதுவே நல்லது!




பரபாசை விடுதலை செய்யும்படிக் கேட்போம்


அதுவே நல்லது
ரோமருக்கு எதிராகப் புரட்சி செய்த தீவிரவாதியே பரபாஸ் என்பவன்


எங்களுக்குப் பரபாஸ் தான் வேண்டும்


எருசலேமின் மக்களே! அமைதியாயிருங்கள், உங்கள் பஸ்கா பண்டிகையை நீங்கள் சமாதானத்துடன் கொண்டாட வேண்டும்.


எந்தப் பிரச்சனைகளும் ஏற்படாதபடி ரோமப் படைகள் தீவிரமான காவல் பணியில் ஈடுபட்டுள்ளன.


வழக்கப்படி பஸ்காவின் போது ஒரு கைதியை உங்களுக்காக விடுதலை செய்ய விரும்புகிறேன்.


பிரபலமானவர்களான இயேசு, பரபாஸ் இருவரில் யாரை நான் விடுதலை செய்ய வேண்டும்?


பரபாஸ்தான் வேண்டும்
பரபாஸ் நீடூழி வாழ்க! பரபாஸ் வேண்டும்
ஜனங்களுக்கு தெரிந்திருந்தால் இயேசுவுக்கு ஆதரவாக வந்திருப்பார்கள்


மாபெரும் தீர்க்கதரிசியாகிய இயேசுவைப் பற்றியா பேசுகிறார்கள். ரோமர்கள் அவரைக் கைது செய்து விட்டார்களா?
எப்போது? எதற்காக!


பெரும்பாலும் அந்நியர்தான் உள்ளனர்


என்ன ஜனங்கள் நல்ல மனிதரையல்ல. ஒரு கலகக்காரன் தான் வேண்டுமாம்.
இப்பரிசேயரின் திட்டத்தை முறியடிக்க முயல்கிறேன்


அமைதி! இரண்டு பேரையும் கொண்டு வந்து நிறுத்துகிறேன் அதன் பின் தேர்ந்தெடுங்கள்.


இயேசுவையும் பரபாசையும் கொண்டு வாருங்கள்




இதோ இந்த மனிதர்
இயேசு அல்ல பரபாஸ் வேண்டும்
பரபாசை விடுதலை செய்யும்
இயேசுவைச் சிலுவையில் அறையும்
பரபாசை விடுவிப்பதே நீர் நாட்டுக்குச் செய்யும் நன்மையாகும்
இயேசு ஏமாற்றுக்காரன்! அவன் சாகவேண்டும்!


பரபாஸ்
பரபாஸ்


இயேசுவை மரிக்க ஒப்புக் கொடுப்பதால் உங்களுக்கு வெட்கமில்லையா?
துயரப்பட்டோரின்வாழ்வில் பல்வேறு நன்மைகளைச் செய்த மாபெரும் தீர்க்கதரிசியல்லவா அந்த இயேசு?
















வைத்து, சிவப்பான அங்கியை அவருக்கு உடுத்தி: யூதருடைய ராஜாவே, வாழ்க என்று சொல்லி அவரைக் கையினால் அடித்தார்கள்... (பிலாத்து) மறுபடியும் அரமனைக்குள்ளே போய், இயேசுவை நோக்கி; நீ எங்கேயிருந்து வந்தவன் என்றான். அதற்கு இயேசு மாறுத்தரம் ஒன்றும் சொல்லவில்லை. அப்பொழுது பிலாத்து: நீ என்னோடே பேசுகிறதில்லையா? உன்னைச் சிலுவையில் அறைய எனக்கு அதிகாரமுண்டென்றும், உன்னை விடுதலை பண்ண எனக்கு அதிகாரமுண்டென்றும் உனக்குத் தெரியாதா என்றான் இயேசு பிரதியுத்தரமாக; பரத்திலிருந்து உமக்கு கொடுக்கப்படாதிருந்தால் என்மேல் உமக்கு ஒரு





















அதிகாரமுமிராது ஆனபடியினாலே என்னை உம்மிடத்தில் ஒப்புக்கொடுத்தவனுக்கு அதிக பாவமுண்டு என்றார் அதுமுதல் பிலாத்து அவரை விடுதலைபண்ண வகைதேடினான் யூதர்கள் அவனை நோக்கி; இவனை விடுதலைப்பண்ணினால் நீர் இ ரா ய னு க் கு ச் சி நே கி த ன ல் ல ; த ன் னை ராஜாவென்கிறவனெவனோ அவன் இராயனுக்கு விரோதி என்று சத்தமிட்டார்கள். பிலாத்து இந்த வார்த்தையைக் கேட்டபொழுது இயேசுவை வெளியே அழைத்துவந்து தளவரிசைப்படுத்தின் மேடையென்றும் எபிரெயு பாஷையிலே கபத்தா என்றும் சொல்லப்பட்ட இடத்திலே நியாயாசனத்தின்மேல் உட்கார்ந்தான் அவர்கள் இவனை அகற்றும், சிலுவையில் அறையும் என்று சத்தமிட்டார்கள்; அதற்குப் பிலாத்து: உங்கள் ராஜாவை நான் சிலுவையில் அறையலாமா? என்றான் பிரதானஆசாரியர் பிரதியுத்தரமாக; இராயனேயல்லாமல் எங்களுக்கு வேறே ராஜா இல்லை என்றார்கள் அப்பொழுது அவரைச் சிலுவையில் அறையும்படிக்கு அவர்களிடத்தில் ஒப்புக்கொடுத்தான் அவர்கள் இயேசுவைப் பிடித்துக்கொண்டு போனார்கள்.









அன்று மூன்று பேர் சிலுவையில் அறையப்பட வேண்டியதாயிருந்தது






கடினமான மரத்துண்டை தன் தோளில் இயேசு சுமக்க வேண்டியதாயிற்று




துயரப்பட்டோர் வியாதியஸ்தருக்கு நன்மையை மட்டுமே செய்த அவருக்கு எவ்வளவு பெரிய அநீதி செய்கின்றனர்
ரோமரிடம் இவரை ஒப்படைத்தவர்கள் மேல் சாபம் வரும்
சத்தியத்தைப் பேசி பரிசேயருடைய போலித்தனத்தை வெளிப் படுத்தியதால் இப்படிச் செய்கின்றனர்
விழுந்து விட்டாரே


சவுக்கடியில் ஏராளம் இரத்தம் வெளி யேறியதால் பலவீனமாகி விட்டான்
ஏய், இவன் சிலுவையை கொல்கொதா வரைக்கும் சுமந்து வரும்படி உனக்குக் கட்டளையிடுகிறேன்.


நானா? நான் எருசலேம் ஆளல்ல. சிரேனே ஊரில் மதிப்புடன் வாழ்பவனாயிற்றே.
ரோமருடன் எதிர்த்து நிற்காதே. கொல்கொதா அருகில் தான் உள்ளது சுமந்து சென்று விடு
எழுந்திரும், நான் சுமக்கிறேன்.
ஐயோ பாவம்!












லூக்கா: 23.25.56

கலகத்தினிமித்தமும் கொலைபாதகத்தினிமித்தமும் காவலில் போடப்பட்டிருந்தவனை அவர்கள் கேட்டுக்கொண்டபடியே விடுதலையாக்கி இயேசுவையோ அவர்கள் இஷ்டத்துக்கு ஒப்புக்கொடுத்தான். அவர்கள் இயேசுவைக் கொண்டு போகிறபோது நாட்டிலிருந்து வருகிற சிரேனே ஊரானாகிய சீமோன் என்கிற ஒருவனைப் பிடித்து சிலுவையை அவர் பின்னே சுமந்துகொண்டுவரும்படி அதை அவன்மேல் வைத்தார்கள். திரள்கூட்டமான ஜனங்களும் அவருக்காகப் புலம்பி அழுகிற ஸ்திரீகளும் அவருக்குப் பின்சென்றார்கள்; இயேசு அவர்கள் முகமாய்த் திரும்பி எருசலேமின் குமாரத்திகளே. நீங்கள் எனக்காக அழாமல் உங்களுக்காகவும் உங்கள் பிள்ளைகளுக்காவும் அழுங்கள் இதோ மலடிகள் பாக்கியவதிகளென்றும் பிள்ளைபெறாத கர்ப்பங்களும் பால்கொடாத முலைகளும்

கொல்கொதவை
அடைந்ததும் அவரது
ஆடைகளைக் களைந்தனர்

ஆடைகளை அங்கே
வையுங்கள். பின்னர்
பாங்கிடுவோம்

















பாக்கியமுள்ளவைகளென்றும் சொல்லப்படும் நாட்கள் வரும். அப்பொழுது மலைகளை நோக்கி எங்கள் மேல் விழுங்களென்றும் குன்றுகளை நோக்கி எங்களை மறைத்துக் கொள்ளுங்களென்றும் சொல்லத் தொடங்குவார்கள் பச்சைமரத்துக்கு இவைகளைச் செய்தால் பட்டமரத்துக்கு என்ன செய்யமாட்டார்கள் என்றார் குற்றவாளிகளாகிய வேறே இரண்டு பேரும் அவரோடேகூடக் கொலை செய்யப்படுவதற்குக் கொண்டுபோகப்பட்டார்கள். கபாலஸ்தலம் என்று சொல்லப்பட்ட இடத்தில் அவர்கள் சேர்ந்த பொழுது அங்கே அவரையும் அவருடைய வலதுபக்கத்தில் ஒரு குற்றவாளியையும் அவருடைய இடதுபக்கத்தில் ஒரு குற்றவாளியையும் சிலுவைகளில் அறைந்தார்கள் அப்பொழுது இயேசு பிதாவே இவர்களுக்கு மன்னியும் தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியாதிருக்கிறார்களே என்றார். அவருடைய வஸ்திரங்களை



















அவர்கள் பங்கிட்டுச் சீட்டுப்போட்டார்கள். ஜனங்கள் நின்று பார்த்துக்கொண்டிருந்தார்கள் அவர்களுடனே கூட அதிகாரிகளும் அவரை இகழ்ந்து, இவன் மற்றவர்களை இரட்சித்தான், இவன் தேவனால் தெரிந்துகொள்ளப்பட்ட கிறிஸ்துவானால் தன்னைத்தானே இரட்சித்துக் கொள்ளட்டும் என்றார்கள் போர்ச்சேவகரும் அவரிடத்தில் சேர்ந்து அவருக்குக் காடியை கொடுத்து: நீ யூதரின் ராஜாவானால் உன்னை இரட்சித்துக்கொள் என்று அவரைப் பரியாசம் பண்ணினார்கள். இவன் யூதருடைய ராஜா என்று கிரேக்கு லத்தீன் எபிரெயு எழுத்துக்களில் எழுதி அவருக்கு மேலாக வைக்கப்பட்டது அன்றியும் சிலுவையில் அறையப்பட்டிருந்த குற்றவாளிகளில் ஒருவன் நீ கிறிஸ்துவானால் உன்னையும் எங்களையும் இரட்சித்துக்கொள் என்று அவரை இகழ்ந்தான்.

மற்றவன் அவனை நோக்கி நீ இந்த ஆக்கினைக்குட்பட்டவனாயிருந்தும் தேவனுக்குப் பயப்படுகிறதில்லையா? நாமோ நியாயப்படி தண்டிக்கப் படுகிறோம். நாம் நடப்பித்தவைகளுக்குத்தக்க பலனை அடைகிறோம் இவரோ தகாததொன்றையும்

எத்தனையோ
பேர் மரிப்பதைக்
கண்டுள்ளேன். ஆனால்
இவர் மெய்யாகவே
தேவகுமாரன்தான்




நடப்பிக்கவில்லையே என்று அவனைக் கடிந்துகொண்டு, இயேசுவை நோக்கி: ஆண்டவரே, நீர் உம்முடைய ராஜ்யத்தில் வரும்போது அடியேனை நினைத்தருளும் என்றான். இயேசு அவனை நோக்கி: இன்றைக்கு நீ என்னுடனே கூடப் பரதீசிலிருப்பாய் என்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார். அப்பொழுது ஏறக்குறைய ஆறாம் மணி நேரமாயிருந்தது ஒன்பதாம்மணி நேரம் வரைக்கும் பூமியெங்கும் அந்தகாரமுண்டாயிற்று சூரியன் இருளடைந்து தேவாலயத்தின் திரைச்சீலை நடுவில் இரண்டாகக் கிழிந்தது; இயேசு பிதாவே உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன் என்று மகா சத்தமாய்க் கூப்பிடச் சொன்னார் இப்படிச் சொல்லி ஜீவனைவிட்டார் நூற்றுக்கு அதிபதி சம்பவித்ததைக் கண்டு மெய்யாகவே இந்த மனுஷன் நீதிபரனாயிருந்தான் என்று சொல்லி தேவனை மகிமைப்படுத்தினான்; இந்தக்காட்சியைப் பார்க்கும்படி கூடிவந்திருந்த ஜனங்களெல்லாரும் சம்பவித்தவைகளைப் பார்த்த பொழுது தங்கள் மார்பில் அடித்துக்கொண்டு திரும்பிப்போனார்கள் யோசேப்பு என்னும் பேர்கொண்ட ஒரு ஆலோசனைக்காரன் இருந்தான். அவன் உத்தமனும் நீதிமானுமாயிருந்தான் அவன் யூதருடைய பட்டணங்களிலொன் றாகிய அரிமத்தியாவிலிருந்து வந்தவனும் தேவனுடைய ராஜ்யத்திற்கு காத்திருந்தவனும் யூதர்களுடைய ஆலோசனைக்கு சம்மதியாதவனுமாயிருந்தான். அவன் பிலாத்துவினிடத்தில்போய் இயேசுவின் சரீரத்தைக் கேட்டு அதை இறக்கி மெல்லிய துப்பட்டியிலே சுற்றி, கன்மலையில் வெட்டப்பட்டதுமாய் ஒருக்காலும்









இதற்கிடையில்



















ஒருவனும் வைக்கப்படாதது மாயிருந்த ஒரு கல்லறையிலே வைத்தான்; அந்த நாள் ஆயத்த நாளாயிருந்தது ஓய்வுநாளும் ஆரம்பமாயிற்று; கலிலேயாவிலிருந்து அவருடனே கூட வந்திருந்த ஸ்திரீகளும் பின்சென்று கல்லறையையும் அவருடைய சரீரம் வைக்கப்பட விதத்தையும் பார்த்து திரும்பிப்போய் சுகந்தவர்க்கங்களையும், பரிமள தைலங்களையும், ஆயத்தம் பண்ணி கற்பனையின்படியே ஓய்நாளில் ஓய்ந்திருந்தார்கள்.









கல்லறையின் வாசலில் பெரிய கல்லைப்
புரட்டி மூடிவைத்தனர்







பஸ்கா ஓய்வுநாளுக்கு மறுநாள் காலையில் சில பெண்கள் கல்லறைக்குச் சென்றனர்...
















மாற்கு:16:1-7

ஓய்வுநாளான பின்பு மகதலேனா மரியாளும் யாக்கோபின் தாயாகிய மரியாளும் சலோமே என்பவளும் அவருக்குச் சுகந்தவர்க்கமிடும்படி அவைகளை வாங்கிக் கொண்டு வாரத்தின் முதலாம் நாள் அதிகாலையில் சூரியன் உதயமாகிற போது கல்லறையினிடத்தில் வந்து கல்லறையின் வாசலிருக்கிற கல்லை நமக்காக எவன் புரட்டித் தள்ளுவான் என்று ஒருவரோடொருவர் சொல்லிக் கொண்டார்கள் அந்தக்கல் மிகவும் பெரிதாயிருந்தது; அவர்கள் ஏறிட்டுப் பார்க்கிறபோது அது தள்ளப்பட்டிருக்கக் கண்டார்கள். அவர்கள் கல்லறைக்குள் பிரவேசித்து வெள்ளையங்கி தரித்தவனாய் வலது பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு வாலிபனைக் கண்டு பயந்தார்கள். அவன் அவர்களை நோக்கி;பயப்படாதிருங்கள் சிலுவையில் அறையப்பட்ட நசரேயனாகிய இயேசுவைத் தேடுகிறீர்கள்; அவர் உயிர்த்தெழுந்தார் அவர் இங்கேயில்லை இதோ அவரை வைத்த இடம். நீங்கள் அவருடைய சீஷரிடத்திற்கும் பேதுருவினிடத்திற்கும் போய்; உங்களுக்கு முன்னே கலிலேயாவுக்குப் போகிறார், அவர் உங்களுக்குச் சொன்னபடியே அங்கே அவரைக் காண்பீர்கள் என்று அவர்களுக்குச் சொல்லுங்கள் என்றான்.



















யோவான்: 20:1-16

வாரத்தின் முதல்நாள் காலையில் அதிக இருட்டோடே மகதலேனா மரியாள் கல்லறையினிடத்திற்கு வந்து கல்லறையை அடைத்திருந்த கல் எடுத்துப் போட்டிருக்கக் கண்டாள். உடனே அவள் ஓடி சீமோன் பேதுருவினிடத்திலும் இயேசுவுக்கு அன்பாயிருந்த மற்ற சீஷரிடத்திலும் போய் கர்த்தரைக் கல்லறையிலிருந்து எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள் அவரை வைத்த இடம் எங்களுக்குத் தெரியவில்லை என்றாள். அப்பொழுது பேதுருவும் மற்றச் சீஷனும் கல்லறையினிடத்திற்குப் போகும்படி புறப்பட்டு இருவரும் ஒருமித்து ஓடினார்கள் பேதுருவைப் பார்க்கிலும் மற்ற சீஷன் துரிதமாய் ஓடி முந்தி கல்லறையினிடத்தில் வந்து அதற்குள்ளே குனிந்து பார்த்து சீலைகள் கிடக்கிறதைக் கண்டான் ஆனாலும் அவன் உள்ளே போகவில்லை. சீமோன்பேதுரு அவனுக்குப் பின்னே வந்து கல்லறைக்குள்ளே பிரவேசித்து சீலைகள் கிடக்கிறதையும் அவருடைய தலையில் சுற்றியிருந்த சீலை மற்ற சீலைகளுடனே வைத்திராமல் தனியே ஒரு இடத்திலே சுருட்டி



மகதலேனா மரியாள் அழுதுகொண்டு
கல்லறையின்அருகில் அமர்ந்தாள்










வைத்திருக்கிறதையும் கண்டான். முந்திக் கல்லறையினிடத்திற்கு வந்த மற்றச் மரியாள் சீஷனும் அப்பொழுது உள்ளே பிரவேசித்து கண்டு விசுவாசித்தான் குனிந்து கல்லறைக்குள்ளே பார்த்து இயேசுவின் சரீரம் வைக்கப்பட்டிருந்த இடத்திலே வெள்ளுடை தரித்தவர்களாய் இரண்டு தூதர்கள் தலைமாட்டில் ஒருவனும் கால்மாட்டில் ஒருவனுமாக உட்கார்ந்திருக்கிறதைக் கண்டாள். அவர்கள் அவளை நோக்கி: ஸ்திரீயே, ஏன் அழுகிறாய், என்றார். அதற்கு அவள் என் ஆண்டவரை எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள் அவரை வைத்த இடம் எனக்குத் தெரியவில்லை என்றாள் இவைகளைச் சொல்லிப் பின்னாகத் திரும்பி இயேசு நிற்கிறதைக் கண்டாள் ஆனாலும் அவரை இயேசு என்று அறியாதிருந்தாள். இயேசு அவளைப் பார்த்து ஸ்திரீயே ஏன் அழுகிறாய்? யாரைத் தேடுகிறாய்? என்றார். அவள் அவரைத் தோட்டக்காரனென்று எண்ணி ஐயா, நீர் அவரை எடுத்துக்கொண்டு போனதுண்டானால் அவரை வைத்து இடத்தை எனக்குச் சொல்லும் நான் போய் அவரை எடுத்துக் கொள்ளுவேன் என்றாள்: இயேசு அவளை நோக்கி மரியாளே என்றார். அவள் திரும்பிப் பார்த்து: ரபூனி என்றாள் அதற்கு போதகரே என்று அர்த்தமாம்.



என் குருவே!

என்னைத் தொட வேண்டாம்

நான் உயிர்த்தெழுந்த செய்தியை என் சீஷர்களுக்குச் சொல்



அன்று மாலை சீடரில் இருவர்
எருசலேமிலிருந்து எம்மாவூர் சென்றனர்.





























ஒரு மணி நேரம் கழித்து....



லூக்கா 24 : 13 - 47

அன்றையத்தினமே அவர்களில் இரண்டுபேர் எருசலேமுக்கு ஏழு அல்லது எட்டுமைல் தூரமான எம்மாவு எனும் கிராமத்துக்குப் போனார்கள். போகையில் இந்த வர்த்தமானங்கள் யாவையுங்குறித்து அவர் ஒருவரோடொருவர் பேசிக் கொண்டார்கள். இப்படி அவர்கள் பேசி சம்பாஷித்துக் கொண்டிருக்கையில் இயேசு தாமே சேர்ந்து அவர்களுடனே கூட நடந்து போனார் ஆனாலும் அவரை அறியாதபடிக்கு அவர்கள் கண்கள் மறைக்கப்பட்டிருந்தது அப்பொழுது அவர் அவர்களை நோக்கி நீங்கள் துக்கமுகமுள்ளவர்களாய் வழிநடந்து ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ளுகிற காரியங்கள் என்னவென்று கேட்டார் அவர்களில் ஒருவனாகிய கிலெயோப்பா என்பவன். பிரதியுத்தரமாக; இந்நாட்களிலே எருசலேமிலே நடந்தவைகளை அறியாதபடிக்கு நீர் அந்நியராயிக்கிறீரோ என்றான். அவர் எவைகள் என்றார் அதற்கு அவர்கள் நசரேயனாகிய இயேசுவைக் குறித்தவைகளே; அவர் தேவனுக்கு முன்பாகவும் ஜனங்களெல்லாருக்கு முன்பாகவும் செய்கையிலும் வாக்கிலும் வல்லமையுள்ள தீர்க்கதரிசியாயிருந்தார். நம்முடைய பிரதான ஆசாரியரும் அதிகாரிகளும் அவரை மரண ஆக்கினைக்குட்படுத்தி சிலுவையில் அறைந்தார்கள். அவரே இஸ்ரவேலை மீட்டிரட்சிப்பவர் என்று நாங்கள் நம்பியிருந்தோம் இவை சம்பவித்து இன்று மூன்று நாட்கள் ஆகின்றது. ஆனாலும் எங்கள் கூட்டத்தைச் சேர்ந்த சில ஸ்திரீகள் அதிகாலமே கல்லறையினிடத்திற்குப் போய் அவருடைய சரீரத்தைக் காணாமல் திரும்பிவந்து அவர் உயிரோடிருக்கிறார் என்று சொன்ன தேவதூதரைத் தரிசித்தோம் என்று சொல்லி எங்களை பிரமிக்கப் பண்ணினார்கள் அப்பொழுது எங்களிலே சிலர் கல்லறையினிடத்திற்குப் போய் ஸ்திரீகள் சொன்னபடியே




கண்டார்கள். அவரையோ காணவில்லை என்றார்கள் அப்பொழுது அவர் அவர்களை நோக்கி தீர்க்கதரிசிகள் சொன்ன யாவையும் விசுவாசிக்கிறதற்குப் புத்தியில்லாத மந்த




உணவு வேளையில் அவர் அப்பத்துக்காக ஸ்தோத்திரம் செய்து, பிட்டு அவர்களுக்குக் கொடுத்தார்





அப்போது அவர்கள் கண்கள் திறக்கப்பட்டு அவர் யாரென்று கண்டு கொண்டனர்.



அதன் பின் அவர் மறைந்து விட்டார்.




இருதயமுள்ளவர்களே கிறிஸ்து இவ்விதமாக பாடுபடவும் தமது மகிமையில் பிரவேசிக்கவும் வேண்டியதில்லையா என்று சொல்லி மோசே முதலிய சகல தீர்க்கதரிசிகளும் எழுதினவேதவாக்கியங்களெல்லாவற்றிலும் தம்மைக்குறித்துச் சொல்லியவைகளை அவர்களுக்கு விவரித்துக் காண்பித்தார். அத்தருணத்தில் தாங்கள் போகிற கிராமத்துக்குச் சமீபமானார்கள். அப்பொழுது அவர் அப்புறம் போகிறவர் போலக் காண்பித்தார். அவர்கள் அவரை நோக்கி, நீர் எங்களுடயே தங்கியிரும் சாயங்காலமாயிற்று, பொழுதும் போயிற்று என்று அவரை வருந்திக் கேட்டுக் கொண்டார்கள் அப்பொழுது அவர் அவர்களுடனே தங்கும்படி உள்ளே போனார். அவர்களோடே அவர் பந்தியிருக்கையில் அவர் அப்பத்தை எடுத்து ஆசீர்வதித்து அதைப்பிட்டு அவர்களுக்குக் கொடுத்தார். அப்பொழுது அவர்களுடைய கண்கள் திறக்கப்பட்டு அவரை அறிந்தார்கள் உடனே அவர் அவர்களுக்கு மறைந்து போனார் அப்பொழுது அவர்கள் ஒருவரையொருவர் நோக்கி வழியிலே அவர் நம்முடனே பேசி வேதவாக்கியங்களை நமக்கு விளங்கக் காட்டினபொழுது நம்முடைய இருதயம் நமக்குள்ளே கொழுந்துவிட்டு எரியவில்லையா என்று சொல்லிக்கொண்டு, அந்நேரமே எழுந்திருந்து எருசலேமுக்கு திரும்பிப்போய் பதினொருவரும் அவர்களோடிருந்தவரும் கூடியிருக்கக்கண்டு, கர்த்தர்









திடீரென இயேசுவே அங்கு தோன்றினார்.










மெய்யாகவே உயிர்த்தெழுந்து சீமோனுக்கு தரிசனமானார் என்று அவர்கள் சொல்லக்கேட்டு வழியில் நடந்தவைகளையும் அவர் அப்பத்தைப் பிட்கையில் தாங்கள் அவரை அறிந்து கொண்டதையும் விவரித்துச் சொன்னார்கள். இவைகளைக் குறித்து அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் இயேசு தாமே அவர்கள் நடுவிலே நின்று: உங்களுக்குச் சமாதானம் என்றார். அவர்கள் கலங்கி பயந்து ஒரு ஆவியைக் காண்கிறதாக நினைத்தார்கள். அவர் அவர்களை நோக்கி: நீங்கள் ஏன் கலங்குகிறீர்கள் உங்கள் இருதயங்களில் சந்தேகங்கள் எழும்புகிறதென்ன நான் தான் என்று அறியும்படி என் கைகளையும் கால்களையும் பாருங்கள் என்னைத் தொட்டுப் பாருங்கள் நீங்கள் காண்கிறபடி எனக்கு மாம்சமும் எலும்புகளும் உண்டாயிருக்கிறது போல ஒரு ஆவிக்கு இராதே என்று சொல்லி தம்முடைய கைகளையும் கால்களையும் அவர்களுக்குக் காண்பித்தார் ஆனாலும் சந்தோஷத்தினால் அவர்கள் இன்னும் விசுவாசியாமல் ஆச்சரியப்படுகையில் புசிக்கிறதற்கு ஏதாகிலும் இங்கே உண்டா என்று அவர்களிடத்தில் கேட்டார் அப்பொழுது பொரித்த மீன்கண்டதையும் தேன்கூட்டுத் துணிக்கையையும் அவருக்குக் கொடுத்தார்கள். அவைகளை அவர் வாங்கி அவர்களுக்கு முன்பாகப் புசித்து அவர்களை நோக்கி மோசேயின் நியாயப்பிரமாணத்திலும் தீர்க்கதரிசிகளின் ஆகமங்களிலும் சங்கீதங்களிலும் என்னைக் குறித்து எழுதியிருக்கிறவைகளெல்லாம் நிறைவேற வேண்டியதென்று நான் உங்களோடிருந்த போது உங்களுக்குச் சொல்லிக்




கொண்டுவந்த விசேஷங்கள் இவைகளே என்றார் அப்பொழுது வேதவாக்கியங்களை அறிந்து கொள்ளும்படி அவர்களுடைய மனதை அவர் திறந்து அவர்களை நோக்கி எழுதியிருக்கிறபடி கிறிஸ்து பாடுபடவும் மூன்றாம் நாள் மரித்தோரிலிருந்தெழுந்திருக்கவும் வேண்டியதாயிருந்தது அன்றியும் மனந்திரும்புதலும் பாவமன்னிப்பும் எருசலேம் தொடங்கிச் சகல தேசத்தாருக்கும் அவருடைய நாமத்தினாலே பிரசங்கிக்கப்படவும் வேண்டியது

பஸ்காவின் மறுநாள் மாலையில் தன் சீஷருக்கு இயேசு காட்சியளித்தார். ஒரு வாரம் கழித்து அவர்கள் கூடி வந்தனர்.





















யோவான்:20:19-29

வாரத்தின் முதல் நாளாகிய அன்றையத்தினம் சாயங்கால வேளையிலே சீஷர்கள் கூடியிருந்த இடத்தில் யூதர்களுக்குப் பயந்ததினால் கதவு பூட்டப்பட்டிருக்கையில் இயேசு வந்து நடுவே நின்று உங்களுக்குச் சமாதானம் என்றார். அவர் இப்படிச் சொல்லி தமது கைகளையும் விலாவையும் அவர்களுக்குக் காண்பித்தார். சீஷர்கள் கர்த்தரைக் கண்டு சந்தோஷப்பட்டார்கள். இயேசு மறுபடியும் அவர்களை நோக்கி உங்களுக்கு சமாதானமுண்டாவதாக; பிதா என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று சொல்லி அவர்கள் மேல் ஊதி பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுங்கள் எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும். எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் என்றார். இயேசு வந்திருந்த போது பன்னிருவரில் ஒருவனாகிய திதிமு என்னப்பட்ட தோமா என்பவன் அவர்களுடனே கூட இருக்கவில்லை. மற்ற சீஷர்கள் கர்த்தரைக் கண்டோம் என்று அவனுடனே சொன்னார்கள் அதற்கு அவன் அவருடைய கைகளில் ஆணிகளினாலுண்டான காயத்தை நான் கண்டு அந்தக் காயத்திலே என்விரலை விட்டு என் கையை அவருடைய விலாவிலே போட்டாலொழிய விசுவாசிக்க மாட்டேன் என்றான் மறுபடியும் எட்டு













நாளைக்குப்பின்பு அவருடைய சீஷர் வீட்டுக்குள்ளே இருந்தார்கள். தோமாவும் அவர்களுடனே கூட இருந்தான். கதவுகள் பூட்டப்பட்டிருந்தது. அப்பொழுது இயேசு வந்து நடுவே நின்று உங்களுக்கு சமாதானம் என்றார். பின்பு அவர் தோமாவை நோக்கி நீ உன் விரலை இங்கே நீட்டி என் கைகளைப் பார்; உன் கையை நீட்டி என் விலாவிலே போடு. அவிசுவாசியாயிராமல் விசுவாசியாயிரு என்றார். தோமா அவருக்கு பிரதியுத்தரமாக; என் ஆண்டவரே என் தேவனே என்றான். அதற்கு இயேசு; தோமாவே நீ என்னைக் கண்டதினாலே விசுவாசித்தாய். காணாதிருந்தும் விசுவாசிக்கிறவர்கள் பாக்கியவான்கள் என்றார்.













யோவான் 21:1-19
இவைகளுக்குப் பிறகு இயேசு திபேரியா கடற்கரையிலே மறுபடியும் சீஷருக்கு தம்மை வெளிப்படுத்தினார். வெளிப்படுத்தின விவரமாவது: சீமோன் பேதுருவும் திதிமு எனப்பட்ட தோமாவும் கலிலேயா நாட்டிலுள்ள கானா ஊரானாகிய நாத்தான்வேலும் செபெதேயுவின் குமாரரும் அவருடைய சீஷரில் வேறு இரண்டு பேரும் கூடியிருந்த போது சீமோன் பேதுரு மற்றவர்களை நோக்கி; மீன் பிடிக்கப் போகிறேன் என்றான். அதற்கு அவர்கள் நாங்களும் உம்முடனேகூட வருகிறோம் என்றார்கள் அவர்கள் புறப்பட்டுப் போய், உடனே படவேறினார்கள். அந்த இராத்திரியிலே அவர்கள் ஒன்றும் பிடிக்கவில்லை. விடியற்காலமானபோது இயேசு கரையிலே நின்றார். அவரை இயேசு என்று சீஷர்கள்


















ஏறக்குறைய இருநூறு முழத் தூரத்தில் இருந்தபடியினால் படவிலிருந்து கொண்டே மீன்களுள்ள வலையை இழுத்துக் கொண்டு வந்தார்கள். அவர்கள் கரையிலே வந்திறங்கினபோது கரிநெருப்புப் போட்டிருக்கிறதையும் அதின்மேல் மீன் வைத்திருக்கிறதையும் அப்பத்தையும் கண்டார்கள். இயேசு அவர்களை நோக்கி நீங்கள் இப்பொழுது பிடித்த மீன்களில் சிலவற்றைக் கொண்டு வாருங்கள் என்றார். சீமோன் பேதுரு படவில் ஏறி நூற்றைம்பத்து மூன்று பெரிய மீன்களால் நிறைந்த வலையைக் கரையில் இழுத்தான். இத்தனை மீன்கள் இருந்தும் வலை கிழியவில்லை இயேசு அவர்களை நோக்கி: வாருங்கள் போஜனம் பண்ணுங்கள் என்றார். அவரைக் கர்த்தரென்று சீஷர்கள் அறிந்தபடியினால் அவர்களில் ஒருவனும் நீர் யார் என்று கேட்கத் துணியவில்லை அப்பொழுது இயேசு வந்து அப்பத்தையும் மீனையும் எடுத்து அவர்களுக்குக் கொடுத்தார். இயேசு மரித்தோரிலிருந்தெழுந்த பின்பு தம்முடைய சீஷருக்கு













ஒலிவ மலையிலிருந்து இயேசு பரலோகம்
சென்றதை சீஷர்கள் கண்டனர். அந்த இயேசு கூறியது:
விரைவில் வரப்போகிறார்!!!

அருளின தரிசனங்களில் இது மூன்றாவது தரிசனம். அவர்கள் போஜனம் பண்ணின பின்பு இயேசு சீமோன் பேதுருவை நோக்கி; யோனாவின் குமாரனாகிய சீமோனே, இவர்களிலும் அதிகமாய் நீஎன்னிடத்தில் அன்பாயிருக்கிறாயா என்றார். அதற்கு அவன்: ஆம் ஆண்டவரே உம்மை நேசிக்கிறேன் என்பதை நீர் அறிவீர் என்றான் அவர்;என் ஆட்டுக்குட்டிகளை மேய்ப்பாயாக என்றார் இரண்டாந்தரம் அவர் அவனை நோக்கி, யோனாவின் குமாரனாகிய சீமோனே நீ என்னிடத்தில் அன்பாய் இருக்கிறாயா என்கிறார் அதற்கு அவன் ஆம், ஆண்டவரே அவரசு உம்மை நேசிக்கிறேன் என்பதை நீர் அறிவீர் என்றான். என் ஆடுகளை மேய்ப்பாயாக என்றார் மூன்றாந்தரம் அவர் அவனை நோக்கி யோனாவின் குமாரனாகிய சீமோனே நீ என்னை நேசிக்கிறாயா என்றார் அவர் மூன்றாந்தரம் தன்னைக் கேட்டபடியினாலே பேதுரு துக்கப்பட்டு ஆண்டவரே எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர் என்றான் நான் உம்மை நேசிக்கிறேன் என்பதையும் நீர் அறிவீர் என்றான் இயேசு என் ஆட்டுக்குட்டிகளை மேய்ப்பாயாக என்றார் நீ இளவயதுள்ளவனாயிருந்தபோது உன்னை நீயே அரைக்கட்டிக் கொண்டு உனக்கு இஷ்டமான இடங்களிலே நடந்து திரிந்தாய் நீ முதிர்வயதுள்ளவனாகும் போது உன் கைகளை நீட்டுவாய் வேறொருவன் உன் அரையைக்கட்டி உனக்கு இஷ்டமில்லாத இடத்துக்கு உன்னைக் கொண்டு போவான் என்று மெய்யாகவே சொல்லுகிறேன் என்றார் இன்னவிதமான மரணத்தினாலே அவன் தேவனை மகிமைப்படுத்தப் போகிறானென்பதைக் குறிக்கும்படியாக இப்படிச் சொன்னார் அவர் இதைச் சொல்லிய பின்பு அவனை நோக்கி என்னைப் பின்பற்றிவா என்றார்.



# கடவுளின் அன்பு உனக்காக

தேவன் தம்முடைய ஒரே பேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ. அவன் கெட்டுப் போகாமல் நித்திய ஜீவனை அடையும்படிக்கு அவரைத் தந்தருளி இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார் (யோவான் 3:16)

நாம் பாவிகளாயிருக்கையில் கிறிஸ்து நமக்காகமரித்ததினாலே. தேவநம்மேல் வைத்த தமது அன்பை விளங்கப்பண்ணுகிறார் (ரோமர்:5.8)

அதற்கு இயேசு; நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்; என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான் (யோவான் 14:6)

அவருடைய குமாரனாகிய இயேசுகிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி: நம்மைச் சுத்திகரிக்கும், நமக்குப் பாவமில்லை என்போமனால் நம்மைபோல் வஞ்சிக்கிறவர்களாயிருப்போம். சத்தியம்நமக்குள் இராது. நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால் பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி, நம்மைச் சுத்தகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார்

(யோவான் 1:7-9)

தேவனே பாவியாகிய என்மேல் கிருபையாயிரும் (லூக்கா 18:13)

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி அப்பொழுது நீயும் உன் விட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள்

(அப்போஸ்தலர் 16:31)

## நற்செய்தி

### இயேசு கிறிஸ்து மரித்தார். பின் உயிர்த்தெழுந்தார்

### அவர் ஜீவிக்கிறார்.

ஜெபம்:

**இயேசுவே, நீர் என்னுடைய பாவங்களுக்காக மரித்தீர் என்பதை நான் முழுஉள்ளத்தோடு நம்புகிறேன். என்னுடைய எல்லா பாவங்களையும் நான் அறிக்கை செய்து. உம்மிடத்தில் மன்னிப்புக் கேட்கிறேன்.நீர் என் உள்ளத்தில் வந்து. இது முதற் கொண்டு என் வாழ்வில் ஜீவித்தருளும். என் சித்தமல்ல உம் சித்தமே நடப்பதாக, நீர் என் இரட்சகராக இருப்பதனால் உமக்கு நன்றி ஆமென்.**

# மத்தேயு

**பரலோக ஆசீர்வாதம் :**

5. அவர் திரளான ஜனங்களைக் கண்டு மலையின் மேல் ஏறினார்; அவர் உட்கார்ந்தபொழுது அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் வந்தார்கள். [2]அப்பொழுது அவர்தமது வாயைத்திறத்து அவர்களுக்கு உபதேசித்துச் சொன்னது என்னவென்றால்; [3]ஆவியில் எளிமை யுள்ளவர்கள் பாக்கியவான்கள்; பரலோக ராஜ்யம் அவர்களுடையது. [4]துயரப்படுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் ஆறுதலடைவார்கள் [5]சாந்த குணமுள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள்பூமியைச் சுதந்தரித்துக் கொள்ளுவார்கள். [6]நீதியின்மேல் பசிதாக முள்ளவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் திருப்தியடைவார்கள் [7]இரக்கமுள்ளவர்கள் பாக்கியவான்கள் அவர்கள் இரக்கம் பெறுவார்கள். [8]இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள் அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள்.

[9]சமாதானம்பண்ணுகிறவர்கள் பாக்கிய வான்கள்; அவர்கள் தேவனுடைய புத்திரர் என்னப்படுவார்கள் [10]நீதியினி மித்தம் துன்பப்படுகிறவர்கள். பாக்கியவான்கள் பரலோகராஜ்யம் அவர்களுடையது [11]என்னிமித்தம் உங்களை நிந்தித்துத் துன்பப்படுத்தி, பலவித தீமையான மொழிகளையும் உங்கள்பேரில்பொய்யாய்ச்சொல்லுவார் களானால் பாக்கியவான்காளயிருப்பீர்கள்; [12]சந்தோஷப்பட்டு. களிகூருங்கள்; பரலோகத்தில் உங்கள் பலன் மிகுதி யாயிருக்கும்;உங்களுக்கு முன்னிருந்த தீர்க்கதரிசிகளையும் அப்படியே துன்பப்படுத்தினார்கள்.

**உப்பும் வெளிச்சமும்**

[13]நீங்கள் பூமிக்கு உப்பாயிருக்கீறர்கள்; உப்பானது சாரமற்றுப்போனால்.எதினால் சாரமாக்கப்படும்? வெளியே கொட்டப் படுவறத்கும் மனுஷரால் மதிக்கப் படுவதற்கும் ஒழிய வேறொன்றுக்கும் உதவாது

[14] நீங்கள் உலகத்துக்கு வெளிச்சமா யிருக்கிறீர்கள்; மலையின்மேல் இருக்கிற பட்டணம் மறைந்திருக்க மாட்டாது [15]விளக்கைக் கொழுத்தி மரக்காலால் மூடிவைக்காமல் விளக்குத்தண்டின்மேல் வைப்பார்கள் அப்பொழுது அது வீட்டிலுள்ள யாவருக்கும் வெளிச்சம் கொடுக்கும் [16]இவ்விதமாய் மனுஷர் உங்கள் நற்கிரியைகளைக் கண்டு பரலோகத்தி-ருக்குற உங்கள் பிதாவை மகிமைப்படுத்தும் உங்கள் வெளிச்சம் அவர்கள் முன்பாக பிரகாசிக்கக் கடவது.

நியாயப்பிரமாணத்தின் நிறைவு

[17]நியாயப்பிரமாணத்தையானாலும் தீர்க்கதரி சனங்களையானாலும் அழிக்கிறதற்வந்தேன்என்று எண்ணிக் கொள்ளாதேயுங்கள்; அழிக்கிறதற்கு அல்ல.நிறைவேற்றுகிறதற்கே வந்தேன்.

[18]வானமும்,பூமியும் ஒழிந்துபோனாலும் நியாயப்பிரமாணத்திலுள்ள.தெல்லாம் நிறைவேறுமளவும். அதில் ஒரு சிறு எழுத்தாகிலும். ஒரு எழுத்தின் உறுப்பாகிலும் ஒழிந்து போனாது என்று மெய்ளாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

[19]ஆகையால் இந்தக் கற்பனைகள் எல்லாவற்றிலும் சிறிதானதொன்றை யாகிலும்மீறி அவ்விதமாய் மனுஷருக்குப் போதிக்கிறவன் பரலோக ராஜ்யத்தில் எல்லாரிலும் சிறியவன் என்னப்படுவான்; இவைகளைக் கைக்கொண்டு போதிக் கிறவனோ பரலோக ராஜ்யத்தில் பெரிவன்என்னப்படுவான். [20]வேதபாரகள் பரிசேயர் என்பவர்களுடைய நீதியிலும் உங்கள் நீதி அதிகமாயிராவிட்டால் பரலோகராஜ்யத்தில் பிரவேசிக்கமாட்ள்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

**கொலை பாதகம்**

[21]கொலை செய்யாதிருப்பாயாக என்பதும, கொலை செய்கிறவன் நியாயத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான் என்பதும் பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்ட தென்று கேள்விப்பட்டிருப்பீர்கள்.

[22]நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; தன் சகோதரனை நியாயமில்லாமல் கோபித்துக்கொள்பவன் யாயத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான்; தன் சகோதரனை வீணனென்று சொல்லுகிறவன் ஆலோசனைச் சங்கத்தீர்ப்புக்கு ஏதுவாயிருப்பான். மூடனே என்று சொல்லுகிறவன் எரிநரகத்துக்கு ஏதுவாயிருப்பான்.

[23] ஆகையால் நீ பலிபீடத்தினிடத்தில் உன் காணிக்கையைச் செலுத்த வந்து, உன் பேரில் உன் சகோதரனுக்கு குறை உண்டென்று அங்கே நினைவு கூருவாயாகில் [24] அங்கே நினைவு பீடத்தின் முன் உன் காணிக்கையை வைத்து விட்டுப் போய் முன்பு உன் சகோதரனோடே ஒப்பரவாகி, பின்பு வந்து உன் காணிக்கையைச் செலுத்து. [25] எதிராளி உன்னை நியாயா திபதி யினிடத்தில் ஒப்புக்கொடாமலும் நியாயாதிபதி உன்னை சேவகாளிடத்தில் ஒப்புக் கொடமலும். நீ சிறைச் சாலையில் வைக்கப்படாமலும் இருக்கும்படியாக நீ உன் எதிராளியோடு வழியில் இருக்கும்போதே சீக்கிரமாய் அவனுடனே நல்மனம் பொருந்து. [26] பொருந்தா விட்டால் நீ ஒரு காசும் குறைவின்றிக் கொடுத்துத் தீர்க்குமட்டும் அவ்விடத்திலிருந்து புறப்பம்மாட்டாய் என்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்.

## விபச்சாரம்

[27] விபசாரஞுசெய்யாதிருப்பாயாக என்பது பூர்வத்தாருக்கு உரைக்க ப்பட்டதென்று கேள்விப்படிருககிறீர்கள் [28] நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; ஒரு ஸ்திரீயை இச்சையோடு பார்க்கிற எவனும் தன் இருதயத்தில் அவளோடே விபசாரஞ் செய்தாயிற்று [29] உன் வலது கண் உனக்கு இடறலுண்டாக்கினால் அதைப் பிடுங்கி எறிந்து போடு; உன் சரீரம் முழுவதும் நரகத்தில் தள்ளப்படுவதைப் பார்க்கிலும் உன் அவயங்களில் ஒன்று கெட்டுப் போவது உனக்கு நலமாயிருக்கும் [30] உன் வலது கை உனக்கு இடறலுண்டாக்கினால் அதைத்தறித்துஎறிந்துபோடு. உன்சரீரம் முழுவதும் நகரத்தில் தள்ளப்படுவதைப் பார்க்கிலும், உன் அவயங்களில் ஒன்று கெட்டுப்போவது உனக்கு நலமாயிருக்கும்

## விவகரத்து

[31] தன் மனைவியைத் தள்ளிவிடுகிற எவனும் தள்ளுதற்சீட்டை அவளுக்குக் கொடுக்கக்கடவன்என்று உரைக்கப்பட்டது [32] நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; வேசித்தன்முகாந்தரத்தினாலொழிய தன் மனைவியைத் தள்ளிவிடுகிறவன் அவளை விபசாரஞ் செய்யப்பண்ணுகிற வனாயிருப்பான்; அப்படி தள்ளிவிடப் பட்டவளை விவாகம் பண்ணுகிறவனும் விபசாரஞ் செய்கிறவனாயிருப்பான்.

## சத்தியம் (ஆணை)

[33] அன்றியும். பொய்யாணையிடாமல் உன் ஆணைகளை கர்த்தர் முன்னிலை யாய்ச் செலுத்துவாயாக என்று பூர்வத் தாருக்கு உரைக்கப்பட்டதென்று கேள்விப் பட்டிருக்கிறீர்கள். [34] நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; பரிச்சேதம் சத்தியம் பண்ணவேண்டாம்; வானத்தில் பேரில்; சத்தியம் பண்ணவேண்டாம்; அது தேவனுடைய சிங்காசனம் [35] பூமியின் பேரிலும் சத்தியம் பண்ண வோண்டாம் அது அவருடைய பாதபடி; எருசலேமின் பேரிலும்சத்தியம்பண்ணவேணடாம். அது மகராஜாவினுடைய நகரம் [36] உன் சிரசின்பேரிலும் சத்தியம் பண்ண வேண்டாம் அதின் ஒரு மயிரையாவது வெண்மையாக்கவும் கறுப்பாக்கவும் உன்னால் கூடாது [37] உள்ளதை உள்ளதென்றும் இல்லதை இல்லதென்றும் சொல்லுங்கள்; இதற்கு மிஞ்சினது தீமையினால் உண்டாயிருக்கும்.

## கண்ணுக்குக் கண்

[38] கண்ணுக்குக் கண் பல்லுக்கு பல் என்று உரைக்கப்பட்டதைக் கேள்விப் பட்டிருக்கிறீர்கள். [39] நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; தீமையோடு எதிர்த்து நிற்கவேண்டாம்;ஒருவன் உன்னைவலது கன்னித்தில் அறைந்தால் அவனுக்குமறு கன்னத்தையும் திருப்பிக்கொடு [40] உன்னோடு வழக்காடிஉன்வஸ்திரத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றிருக் கிறவனுக்குஉன்அங்கியையும்விட்டுவிடு. [41] ஒருவன் உன்னை ஒருமைல் தூரம்வர பலவந்தம் பண்ணினால் அவனோடு இரண்டுமைல்தூரம்போ. [42] உன்னிடத்தில் கேட்கிறவனுக்குக் கொடு உன்னிடத்தில் கடன்வாங்க விரும்புகிறவனுக்கு முகங்கோணாதே.

## சத்துருக்களை சிநேகித்தல்

[43] உனக்கடுத்தவனைச்சிநேகித்து,உன் சத்துருவைப் பகைப்பாயாக என்று சொல்லப்பட்டிருப்பதைக் கேள்விப் பட்டிருக்கிறீர்கள். [44] நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் உங்கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள்; உங்களைச் சபிக்கிறவர் களை ஆசீர்வதியுங்கள்; உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள்; உங்களை நிந்திக்கிறவர் களுக்காகவும் உங்களைத்துன்பப்படுத்து

கிறவர்களுக்காகவும் ஜெபம் பண்ணுங்கள். [45]இப்படிச் செய்வதினால் நீங்கள் பரலோகத்திருக்கிற உங்கள் பிதாவுக்கு புத்திரராயிருப்பீர்கள்; அவர் தீயோர் மேலும் நல்லோர் மேலும் தமது சூரியனை உதிக்கப்பண்ணி நீதியுள்ளவர்கள்மேலும் அநீதியுள்ளவர்கள் மேலும் மழையைப் பெய்யப்பண்ணுகிறார். [46]உங்களை சிநேகிக்கிறவர்களையே நீங்கள் சிநேகிப்பீர்களானால் உங்களுக்கு பலன்என்ன? ஆயக்காரர்களும் அப்படியே செய்கிறார்கள் அல்லவா? [47]உங்கள் சகோதரரை மாத்திரம் வாழத்துவீர்களானால், நீங்கள் விசேஷித்து செய்கிறது என்ன? ஆயக்காரரும் அப்படிச் செய்கிறார்கள் அல்லவா? [48]ஆகையால் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா பூரண சற்குணராயிருக்கிறது போல நீங்களும் பூரண சற்குணராயிருக்கக்கடவீர்கள்.

## ஏழைகளுக்கு கொடுப்பது

6 மனுஷர் காணவேண்டுமென்று அவர்களுக்கு முன்பாக உங்கள் தர்மத்தை செய்யாதபடிக்கு எச்சரிக்கையாய் இருங்கள்; செய்தால் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவினிடத்தில் உங்களுக்குப் பலனில்லை

[2]ஆகையால் நீ தருமம் செய்யும் போது மனுஷரால் புகழப்படுவதற்கு, மாயக்காரர்ஆலயங்களிலும்,வீதிகளிலும் செய்வது போல உனக்குமுன்பாகத் தாரை ஊதுவியாதே அவர்கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். [3]நீயோ தர்மஞ் செய்யும்போது உன் தர்மம் அந்தரங்கமாயிருப்பதற்கு, உன்வலதுகை செய்கிறதை இடதுகை அறியாதிருக்கக் கடவது [4]அப்பொழுது அந்தரங்கத்தில் பார்க்கிற உன் பிதா தாமே உனக்கு வெளியரங்கமாய்ப் பலனளிப்பார்.

## ஜெபம்

[5]அன்றியும் நீ ஜெபம் பண்ணும்போது மாயக்காரரைப் போலிருக்க வேண்டாம், மனுஷர் காணும்படியாக அவர்கள் ஜெப ஆலயங்களிலும், வீதிகளின்சந்திகளிலும் நின்று ஜெபம் பண்ண விரும்புகிறார்கள்; அவர்கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்த்தென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் [6]நீயோ ஜெபம் பண்ணும்போது உன் அறை வீட்டிற்குள் பிரவேசித்து உன் கதவைப் பூட்டி அந்தரங்கத்திலிருக்கிற உன் பிதாவை நோக்கி ஜெபம் பண்ணு; அப்பொழுது அந்தரங்கத்தில்பார்க்கிறஉன்பிதாஉனக்கு வெளியரங்கமாய் பலனளிப்பார் [7]அன்றியும் நீங்கள் ஜெபம் பண்ணும்போது அஞ்ஞானிகளைப்போல் வீண்வார்த்தைகளை அலப்பாதேயுங்கள். அவர்கள் அதிக வசனிப்பினால் தங்கள் ஜெபம் கேட்கப்படும் என்று நினைக்கிறார்கள் [8]அவர்களைப் போல் நீங்கள் செய்யாதிருங்கள்; உங்கள் பிதாவை நோக்கி, நீங்கள் வேண்டிக் கொள்ளுகிறதற்கு முன்னமே உங்களுக்கு இன்னது தேவை என்று அறிந்திருக்கிறார்.

[9]நீங்கள் ஜெபம் பண்ணவேண்டிய விதமாவது; பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே உம்முடைய நாமம் பரிசுத்தப்படுவதாக;

[10]உம்முடைய ராஜ்யம் வருவதாக உம்முடைய சித்தம் பரமண்டத்திலே செய்யப்படுகிறது போல பூமியிலேயும் செய்யப்படுவதாக.

[11]எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை இன்று எங்களுக்கு தாரும்

[12]எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறது போல எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும்.

[13] எங்களைச் சோதனைக்குட்படப் பண்ணாமல் தீமையினின்று எங்களை இரட்சித்துக் கொள்ளும். ராஜ்யமும் வல்லமையும் மகிமையும் என்றென்றைக்கும் உம்முடையவைகளே, ஆமென் என்பதே.

[14]மனுஷருடையதப்பிதங்களை நீங்கள் அவர்களுக்கு மன்னித்தால் உங்கள் பரமபிதா உங்களுக்கும் மன்னிபார் [15]மனுஷருடைய தப்பிதங்களை நீங்கள் அவர்களுக்கு மன்னியாதிருந்தால் உங்கள் பிதா உங்களை மன்னியாதிருப்பார்

## உபவாசம்

[16]நீங்கள் உபவாசிக்கும்போது மாயக்காரரைப் போல முகவாடலாய் இராதேயுங்கள் அவர்கள் உபவாசிக்கிறதை மனுஷர்கள் காணும்பொருட்டாக, தங்கள் முகங்களை வாடப்பண்ணுகிறார்கள்: அவர்கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் [17]நீயோ உபவாசிக்கும் போது அந்த உபவாசம்மனுஷர்களுக்குச்

